

# சிறிது பச்சை முட்டைகோஸ் சாப்பிடுங்கள்...

சமைக்காத முட்டைகோஸ் வைடமின் 'சி' மிகவும் நிறைந்தது அது பற்களையும், ஈறுகளையும் சௌக்கியமாகவும், ரத்தத்தை சுத்தமாகவும் வைக்கிறது. ஆனால், சமைத்தவுடன் வைடமின் சத்து பாதிக்குமேல் குறைந்துபோகிறது. ஆகையால் தினந்தோறும் இக்கீரையை சிறு துண்டுகளாக்கி ஸலாடுடன் சேர்த்தோ அல்லது வேறு வகைகளிலோ, வேகவைக்காமல் சாப்பிடவும். "*சம நிலை உணவை*" ஞாபகத்தில் வை. ஒரு வாரத்தில் கீழ்கண்ட வகைகளில் ஒவ்வொன்றிலுமிருந்து பல ரகங்களை சாப்பிடு (வைடமின்கள்) பழங்கள், காய்கறிகள், சமைக்காத காய்கறிகள். சரல்: (தாதுப்பொருள்கள்) பால், முட்டை, பாலேடு, மீன், பசலைக்கீரை. (புரதசத்துக்கள்) பால், முட்டை, இரைச்சி, பருப்புகள், மீன், கோதுமை. (மாவுசத்துக்கள்) எல்லா தானியங்கள், அரிசி, உருளைக்கிழங்கு, வாழைப்பழம். கொழுப்புக் கோ. மிகவும் புஷ்டிதரும் பொருள்களில் ஒன்றான டால்டா எவ்விதமான சமையலுக்கும் உகந்தது. சீல் செய்த டின்களில் விற்பனையாவதால், உங்களுக்கு புத்தம்புதிதாகவும், சுத்தமாகவும் கிடைக்கின்றன.




**உங்களுக்கு வைடமின் 'சி' ஏன் நல்லது**

இலவச ஆலோசனைகளுக்கு இன்றே—அல்லது என்று வேண்டுமானாலும்
—எழுதுங்கள்

## டால்டா அட்வைஸரி சர்வீஸ்

தபால் பெட்டி நெ. 353, பம்பாய் 1

HVM. 151-172 TM



கரிகாலனுக்கு கொள்கையிலே
நம்பிக்கை..........
ஊர்வசிக்கு கொலையிலே
நம்பிக்கை..........
கலாவதிக்கு உண்மையிலே
நம்பிக்கை..........
மூன்றிற்கும்
முடிபோட்டார்
மர்மயோகி
ADULTS
..ONLY..
ஜுபிடர் தயாரிப்பு
டைரக்ஷன்: கே. ராம்நாத்
கதை, வசனம்: ஏ. எஸ். ஏ. சாமி
ஸ்டுடியோ: சென்ட்ரல்
சென்னை பிரபாத் · சித்ரா · ராஜகுமாரி
மற்றும் ராஜதானி பூராவும்......


கவலைப்படும்
தாய்
மார்களுக்கு
ஓர் நற்செய்தி
எப்பொழுதும்
தவறாமல் கிடைக்கின்றது
OSTERMILK
ஆஸ்டர்மில்க்
OSTERMILK
சிறுகுழந்தைகளின் பால் உணவு
கிளாக்ஸோ லேபரெட்டரீஸ் (இந்தியா) லிமிட். பம்பாய். கல்கத்தா. மதராஸ்.
Copyright
Sironachi

## அவளது அழகு சிதைந்தே இருந்தது க்ருஷென் காரணத்தைப் போக்கும் வரை



மாக படிந்த தோற்றத்துடனும் அடிக்கடி முகப் பருக்களினாலும் தோலில் தடிப்புகளுடனும் வாழ் நாள் முழுதும் அவள் அவதிப்பட வேண்டுமென்றிருந்ததா? ஆம், அவள் அப்படித்தான் நினைத்தாள். அதிகப் பணச் செலவில் செய்த சர்ம சிகிச்சைகளும், க்ரீம்களும், களிம்பு களும் நிரந்தரமான பலனை அளிக்க வில்லை. பின்னர்தான் அவளது உபாதைகளின் மூல காரணத்தைத் தாக்கிய "க்ருஷனை" நாடினாள்......

அப்பழுக்கற்ற மேனி நிறத்தை யுடைய ஆயிரக்கணக்கான ஸ்திரீகள் உலகெங் கும் 'க்ருஷ'னுக்கு நன்றி செலுத்து கின்றனர். ரத்தத்திலுள்ள அசுத்தங் களே, தோலின் மங்கலான நிறத்திற் குக் காரணமாக அமையும் ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் க்ருஷனிலுள்ள ஆறு விதமான லோக உப்புகள் அதி அற் புதத்தை விளைவிக்கின்றன. மந்த மடைந்த உறுப்புக்களினால் கழிக்கப் பட முடியாத தொல்லை தரும் விஷப் பொருள்கள் வெளியே தள்ளப் படுகின் றன. ரத்தம் சுத்திகரிக்கப்பட்டு ஆரோக்யம் ததும்புகிறது. தோலின் மேலுள்ள மறுக்கள் நீக்கப் பட்டு இயற்கையாகவே உள்ள அழகிய தோற்றம் பெறுகிறது.

க்ருஷனால் அடையப்பட்ட உட்புற சுத்தம் திருப்பி யளிப்பது சர்ம சௌந் தர்யம் மாத்திரமல்ல. அது வாழ்க்கை யின் ஆனந்தத்தையும் அளிக்கிறது. ஈரல், மூத்திரகாய், குடல்கள் இவற்றை இயங்குமாறு ஆறு விதங் களில் தூண்டும் "க்ருஷ"னே தேக நலத்தையும் இயற்கை யழகையும் திரும்பப் பெற மிகச் சிறந்ததும் சிக்கன மான வழியாகும். க்ருஷனின் விலை ரூ. 1-10-0 தான். எல்லாக் கெமிஸ்டுக ளிடமும் வியாபாரிகளிடமும் கிடைக்கும்

க்ருஷன் ஈ. கிரிபித்ஸ் ஹியூஸ், லிட்., மான்செஸ்டர், இங்கி லாந்து அவர்களால் தயாரிக்கப்பட்டு கார் டீ கம்பெனி லிட்., பம்பாய், மத ராஸ், கல்கத்தா அவர்களால் விநியோகிக் கப் படு கின்றன.




## நீங்களும் அந்த க்ருஷன் உணர்ச்சியைப் பெறலாம்!



கோபால்: (தன்னுடன் பிரயாணம் செய்யும் ஒருவரைப் பார்த்து) ஏன் ஸார், இப்படி ஸ்டேஷனுக்கு ஸ்டேஷன் 'டீ' சாப்பிடுகிறீர்களே!

அவர்: நீங்கள் எல்லோரும் சோர்வுற்று எவ்வளவு கஷ்டப்படுகிறீர்கள் என்பது எனக்குத் தெரியும். நான் அப்படியா இருக்கிறேன், பாருங்கள். களைப்பையும் சோர்வையும் போக்கி ஊக்கமூட்ட நான் 'டீ' யை நம்பியிருக்கிறேன். எத்தனைபேர் 'டீ' 'டீ' என்று கூவுகின்றனர். 'டீ' யின் குணம் அவர்களுக்குத் தெரியும். நீங்களும்தான் 'டீ' சாப்பிட்டுப் பாருங்கள். பிறகு என்னையே முந்தி விடுவீர்கள்.

**டீ**

'டீ' என்றால் என்ன? அதுதான் சிக்கனமானதும், களைப்படைந்த உடம்புக்கு ஊக்கத்தையும், தளர்ந்த மனதிற்கு உற்சாகத்தையும் மீட்டுக் கொடுக்க ஒப்பற்றதும், சுலபமாக தயாரிக்கக்கூடியதும், எங்கும் கிடைப்பதுமான தேசியபானம். ஒரு கோப்பை 'டீ' சாப்பிட்டுப்பாருங்கள் அப்பொழுதே அதன் குண விசேஷங்களை உணர்வீர்கள்.

CTB 38 'ஸென்ட்ரல் டீ போர்ட'ரால் வெளியிடப்பட்டது.



ஒரு காலத்தில் நம் தேசிய நிதி கோடிக் கணக்காக ஒவ்வொரு வருஷமும் வெளியேறிக் கொண்டிருந்தது. ஆனால் ஹிந்த் சைக்கிள்களின் அதிகமான உற்பத்தியின் காரணமாக நம் தேசியப் பொக்கிஷம் வருஷந்தோறும் கோடிக் கணக்காகப் பெருகிக் கொண்டிருக்கிறது. (இன்று வருஷத்திற்கு சுமார் [illegible] லக்ஷம் சைக்கிள்கள் உற்பத்தியாகின்றன). இந்தியாவில் கிடைக்கும் உயர்தரமான சைக்கிள்களில் ஹிந்த் சைக்கிள்தான் மிகக் குறைந்த விலையுள்ளது.



ASP/HC57



டிலக்ஸ்
பிரசித்தி பெற்ற பெயரையும் நம்பரையும் கொண்ட சைக்கிள் டயர். இதை தயாரித்தவர்கள்
குட் இயர்
உலகத்திலேயே பெரிய டயர்கள் தயாரிப்பவர்கள்
டிலக்ஸ் சைக்கிள் டயரின் விசேஷ குணங்கள்
அதிக உழைப்புள்ளது
சிக்கனமானது
அபாய மற்றது
GOODYEAR


CT/5

# விவேகமுள்ள தாய் அறிவாள்

## குழந்தைகளுக்கு இயற்கை உணவே சிறந்தது என்று!



இயற்கை உணவுதான் குழந்தையின் வளர்ச்சிக்கு அஸ்திவாரம்; எனவே தாய்ப்பால் புஷ்டியுடன் போதிய அளவில் பெருக ஓவல்டின் ஜீவசத்துக்களை அளிக்கிறது அதன் சிறந்த குணங்கள் சிசுவை போஷிக்கும். தாய்க்கு பலமும் சக்தியும் அளிப்பதுடன் சிசுக்கும் இன்றியமையாதது. அதில் போஷாக்கு அளிக்கும் சுத்தமான பசுவின் ஏட்டுப்பால், பழுத்த பார்லி மால்ட், கொக்கோ இயற்கை பாஸ் படேட்கள் பி & டி விடாமின்கள் சேர்க்துள்ளன. ஓவல்டினில் இருக்கும் போஷணை மற்றும் விடாமின் சத்துக்கள் இன்றியமையாதவை. ஓவல்டினைப் போலச் சிறந்தது எதுவும் கிடையாது.

டாக்டர்களும் நர்ஸ்களும் அதை சிபாரிசு செய்கின்றனர். போலிகளைத் தள்ளிவிடுங்கள்

விநியோகஸ்தர்கள் : ரொஹாம்ஸ் டிரேடிங் கம்பெனி (இந்தியா) லிட்.

# ஓ வ ல் டி ன்

பாலூட்டும் தாய்மார்களுக்கு




OV. 323

ஆயுர்வேத
ஔஷதம்

## மிர்தஸஞ்ஜீவனி - சுதா

● இருதய வலிக்கும், மூளைக்கும் சிறந்தது.

● பிரசவத்திற்குப் பின் உண்டாகும் பலஹீனத்திற்கு மிக்க ஆரோக்கியமளிக்கக்கூடியது.

பெரிய புட்டி ரூ. 5. சிறிய புட்டி ரூ. 3
(வி. பி. செலவு தனி)

●

## சோனிதா - ஸல்ஸா

இரத்த உற்பத்திக்கும், இரத்த சுத்திக்கும் சிறந்த நிவாரணி

பெரிய புட்டி ரூ. 5 சிறிய புட்டி ரூ. 3
(வி. பி செலவு தனி)

தயாரிப்பவர் :

**DACCA OUSHADHALAY LTD.**

56-C BEADON STREET. CALCUTTA - 6

கிடைக்குமிடம் :

**இண்டோ மெடிகல் சப்ளைஸ்**

205, தங்கசாலைத் தெரு : மதராஸ் - 1



# ஸ்வாமீஸ் லாட்ஜ்

நெ. 1, ஜெனரல் பாட்டர்ஸ் ரோடு
மவுண்ட் ரோடு : மதராஸ்

போன் : 86262

சகல சௌகரியங்களும் கூடிய நல்ல காற்றோட்டமுள்ள ஒருவர், இருவர் தங்குவதற்கான மிக்க வசதியுள்ள விசாலமான அறைகள் கொண்டது. மவுண்ட் ரோடில் நகரத்தின் மத்தியில் அமைக்கப் பட்டுள்ளது.

●

புரொப்ரைட்டர்கள் :

**ஸ்வாமீஸ் கபே, மதராஸ்-2**



# லிவர்ஜென்

ஈரல் வியாதிகளுக்கு சிறந்தது

A SPW PRODUCT

கடும் மலச்சிக்கல், பித்தப்பை கோளாறு, வாயுப் பொருமல், நீடித்த அஜீரணம், பசியின்மை இவைகளால் துன்புறும் குழந்தை முதல் பெரியோர் வரை யாவர்க்கும் மிகவும் இன்றியமையாதது.




புக்கிங்களுக்கு

| திருச்சி, தஞ்சாவூர்: | மைசூர்: | மதுரை. ராமநாதபுரம்: | திருநெல்வேலி: |
|---|---|---|---|
| கிரேட் இந்தியா பிலிம்ஸ் | ஏ.கே. பிலிம் எக்ஸ்சேஞ்ச் | மீனாக்ஷி டாக்கீஸ் | நெல்லை பிக்சர்ஸ் சர்க்யூட் |
| ஸ்ரீரங்கம் | காந்திநகர், பெங்களூர்-2 | மதுரை | திருநெல்வேலி |

இதர இடங்களுக்கு

விண்ட்ஸர் புரொடக்ஷன்ஸ், 24, போக் ரோடு, தியாகராயநகர், மதராஸ்-1

# பொருள் அடக்கம்

கல்கி

தமிழ்த்திரு நாடு தன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார்

மலர் 10 | 1951 பிப்ரவரி 25 | விக்ருதி ௵
இதழ் 30 | | மாசி 13உ



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.


## கோடை அளிப்பு

போனிக்ஸ் விசிறிகளின் விலைகள் பின்வருமாறு குறைக்கப் பட்டிருக்கின்றன என்பதை எங்கள் அன்பர்களுக்கும் ஆதர வாளர்களுக்கும் மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

| | | | |
|---|---|---|---|
| AC | 36" | சீலிங் விசிறி, ரெகுலேடர் உள்பட | 136-0-0 |
| AC | 48" | ஷை ஷை | 166-0-0 |
| AC | 56" | ஷை ஷை | 179-0-0 |
| AC | 60" | ஷை ஷை | 194-0-0 |

உங்களுக்கு அருகாமையிலுள்ள ரெயில்வே ஸ்டேஷனில் இலவச டெலிவரி செய்யப்படும்.

RM. S. & CO., LTD.,
16, BROADWAY :: MADRAS-1
(PHONE: 4060)




நேபாளத்தில் நடந்து வந்த ராணாக்களின் எதேச்சாதிகாரத்தைப் பண்டித நேருவின் உதவியால் அடக்கி, நேபாள மன்னரும், நேபாளி காங்கிரஸும் ஆட்சிப் பொறுப்பை ஏற்றுக் கொண்டிருக்கின்றனர்—



சட்டசபைகளில் வரும் மசோதாக்களைப் பற்றிக் 'கேட்கவேண்டாம், பார்க்கவேண்டாம், பேசவேண்டாம்' என்ற கொள்கையை சபாநாயகர் சிவசண்முகம் பிள்ளை பத்திரிகைகளுக்குப் போதிக்கிறார்—

# கல்கி

## குடி மக்கள் கட்சியில் முடி மன்னர்!

சென்ற மகா யுத்தத்தில் பெல்ஜியம் மன்னர் லெபோல்டு ஜெர்மானியரின் உக்ரமான எதிர்ப்பைத் தாங்க முடியாமல் அவர்களிடம் சரண் அடைந்தார். யுத்தம் முடியும் வரையில் அவரை ஜெர்மானியர் கைது செய்து வைத்திருந்தார்கள். யுத்தம் முடிந்து விடுதலை அடைந்தபின் லெபோல்டு மறுபடியும் பெல்ஜியத்துக்கு வந்து சிம்மாசனத்தில் அமர்ந்து ஆட்சி செலுத்த முயன்றார். ஆனால் அவரது வருகையைப் பெரும்பாலான பெல்ஜிய மக்களும் கடுமையாக எதிர்த்தார்கள். எனவே லெபோல்டு பெல்ஜியத்துக்கு வர முடியாமல் ஸ்விட்ஜர்லாந்து தேசத்திலே அஞ்ஞாதவாசம் புரிய நேர்ந்தது.

மேற்படி நாடகம் அத்துடன் முடியவில்லை. லெபோல்டை மீண்டும் மன்னர் பீடத்தில் உட்கார வைப்பதற்காகப் பெல்ஜியத்தில் செல்வாக்கும் பலமும் உள்ள ஒரு கட்சி உருவாயிற்று. அந்தக் கட்சியைச் சேர்ந்தவர்களின் பெரு முயற்சியினால் பெல்ஜியம் பார்லிமெண்டில் ஒரு தீர்மானம் நிறைவேறியது. 'லெபோல்டு மறுபடியும் பெல்ஜியத்துக்கு வந்து ராஜ்யாதிகாரத்தை ஏற்றுக் கொள்ளவேண்டும்' என்பதுதான் அந்தத் தீர்மானம்.

செல்வாக்குள்ளவர்களின் செப்பிடு வித்தையினாலும் சூழ்ச்சி வேலைகளினாலும் அத்தகைய தீர்மானம் நிறைவேறியது என்றாலும், பெல்ஜியக் குடி மக்கள் அதை அங்கீகரிக்கவில்லை.

பார்லிமெண்டின் தீர்மானத்துக்கு இணங்க, லெபோல்டு பெல்ஜியத்துக்கு வந்தார். ஜனங்களின் கடுமையான எதிர்ப்பு காரணமாக அவர் தமது அரண்மனைக்கு உள்ளேயே கைதிபோல் இருக்க நேர்ந்தது!

அடக்கு முறைகளினால் ஜனங்களின் எதிர்ப்பை நசுக்க அதிகார வர்க்கம் தன் முழு பலத்தையும் உபயோகித்தது. ஆனால் அது பலிக்கவில்லை. ஜனங்களே வெற்றி பெற்றனர். எனவே லெபோல்டு தாம் வந்த ஒரு வார காலத்துக்குள் ஒருவருக்கும் தெரியாமல் திரும்பி ஸ்விட்ஜர்லாந்துக்கே ஓடிவிட நேர்ந்தது!

மேற்படி சம்பவத்தைக் குறித்து ஆச்சரியம் எதுவும் ஏற்படுவதற்கில்லை. ஏனெனில், இதுவரையில் உலகத்திலே குடி மக்களுக்கும் முடி மன்னர்களுக்கும் நடந்த போராட்டங்கள் எண்ணில் அடங்காது. அத்தகைய சகல போராட்டங்களிலும் இறுதியாகக் குடிமக்களே வெற்றி பெற்றனர்; முடிமன்னர்கள் யாவரும் தோல்வி அடைந்தார்கள்.

மன்னர் கட்சியில் குடிமக்களோ அல்லது குடிமக்கள் கட்சியில் மன்னரோ இருந்ததாகச் சமீப காலத்தில் யாரும் கண்டதும் இல்லை, கேட்டதும் இல்லை.

எனினும் இப்போது அந்த அதிசயம் நடந்திருக்கிறது.

சென்ற நவம்பர் மாதம் முடிதுறந்து இந்தியாவில் வந்து அடைக்கலம் புகுந்த நேபாள மன்னர் திரிபுவன விர விக்ரம ஷா மறுபடியும் ராஜோபசாரத்துடன் நேப்பாளத்துக்குத் திரும்பிச் சென்று சிம்மாசனத்தில் வீற்றிருக்கிறார்!

நூறு ஆண்டுகளுக்கு மேலாக நேப்பாளத்தில் பிரதம மந்திரி ராணா குழுவினர் சர்வாதிகாரம் செலுத்தி வந்தார்கள். பொது ஜனங்களும் மன்னரும் கூட மேற்படி சர்வாதிகாரத்துக்கு உட்பட்டுத் தவிக்க நேர்ந்தது. எனவே, மன்னர் திரிபுவன ஷா மற்ற மன்னர்களைப் போல் பொதுமக்களுக்குப் பயந்துகொண்டு வெளியேறவில்லை. அதற்கு மாறாகப் பொது மக்களுக்காகப் பரிந்து கொண்டு இந்தியாவுக்கு வந்து அடைக்கலம் புகுந்தார்.

இப்போது நேப்பாள மன்னர் துறந்த முடியை மீண்டும் பெற்றிருப்பதற்குக் குடிமக்கள் மீது அவருக்கு உள்ள அன்பே காரணம்!

அதன் காரணமாகவே இந்திய சர்க்கார் திரிபுவன மன்னரைப் பரிபூரணமாக ஆதரித்தனர். இல்லாவிடில், ராணு கோஷ்டியினர் பொம்மை மன்னரை அரியாசனத்திலே அமர்த்துவதில் வெற்றி பெற்றிருக்கலாம்.

மீண்டும் சிம்மாசனம் ஏறியுள்ள நேப்பாள மன்னர், ஜனநாயக முறையை அடிப்படையாகக் கொண்டு நேப்பாள அரசியலைத் தயாரிப்பதாகப் பிரகடனம் செய்துள்ளார். அவரது கட்டளைக்கு இணங்க அமைக்கப்பட்டுள்ள மந்திரி சபையில் ஜனப் பிரதிநிதிகளுக்கு ஸ்தானங்கள் அளிக்கப் பட்டிருக்கின்றன.

சென்ற பல மாதங்களாக உள்நாட்டுக் கலகத்தையும் கொந்தளிப்பையும் உண்டுபண்ணிய நேப்பாள நெருக்கடி இவ்வாறு சுமுகமாக முடிவுற்றதைக் குறித்து, உண்மையான ஜனநாயகத்தில் சிரத்தைகொண்ட உலக மக்கள் யாவரும் மகிழ்ச்சி யடைவார்கள்.

இந்தியாவின் சீரிய முயற்சியினால் நேப்பாளப் பிரச்னை இவ்வளவு நேர்மையாகவும் சாத்வீக முறையிலும் எல்லோருக்கும் திருப்திகரமாகவும் தீர்ந்தது இந்தியாவுக்கு மகத்தான வெற்றி என்பதில் எள்ளளவும் ஐயமில்லை.

# ராஜா சிதம்பரத்தின் யோகம்

திருச்சிராப்பள்ளி ஜில்லா போர்டு தலைவர் ராஜா சிதம்பர ரெட்டியார் நல்ல யோகக்காரர் என்று தோன்றுகிறது.

சில காலத்துக்கு முன்பு நடந்த ஜில்லா போர்டு தேர்தலின் போது திருச்சி ஜில்லாவில் காங்கிரஸ் நிர்வாகத்தினர் நல்ல காங்கிரஸ்காரர்களையும் உண்மையான காங்கிரஸ்காரர்களையும் கூடிய வரையில் ஒதுக்கிவிட்டு, மற்றவர்களைக் காங்கிரஸ் அபேட்சகர்களாக நிறுத்தினார்கள்.

ராஜா சிதம்பரம் பார்த்தார். இதுதான் சமயம் என்று, பொது மக்களிடம் செல்வாக்குப் பெற்ற உண்மையான காங்கிரஸ் வாதிகளைப் பார்த்துப் போட்டி அபேட்சகர்களை நிறுத்தினார். அதிகார வர்க்க காங்கிரஸிடம் அதிருப்தி கொண்டிருந்த ஜனங்கள் ராஜா சிதம்பரம் கோஷ்டிக்குப் பெருவாரியான வோட்டுகளைத் தந்தார்கள். ராஜா சிதம்பரம் ஜில்லா போர்டு தலைவராகி நிர்வாகத்தைத் திறம்பட நடத்தி வருகிறார்.

இந்தச் சமயத்தில் அவருடைய யோகம் நீடிக்கிறது என்பதைக் காட்ட ஒரு காரியம் நிகழ்ந்திருக்கிறது.

சில காலத்துக்கு முன்பு புதுக்கோட்டை சமஸ்தானத்தின் தனி ராஜ்ய உரிமையை ரத்து செய்து திருச்சிராப்பள்ளி ஜில்லாவில் சேர்த்து விட்டார்கள்.

திருச்சி ஜில்லா போர்டில் புதுக்கோட்டைக்குப் பிரதிநிதித்வம் வேண்டும் அல்லவா!

இதற்கு, பூரண சுதந்திரம்பெற்ற ஜனநாயக இந்தியாவில் தேர்தல் முறையைக் கையாளுவது தான் நியாயம். அப்படிச் செய்யாமல் பழைய அதிகாரவர்க்க நியமன முறையைக் கையாளுவது என்று சென்னை சர்க்கார் தீர்மானித்தார்கள். அதற்காக கனம் சந்திரமௌலி சென்னைச் சட்டசபையில் ஒரு மசோதாக் கொண்டு வந்தார்.

சென்னைச் சட்டசபையில் இப்போதுள்ள அங்கத்தினர் பெரும்பாலோர் ஒரு மாதிரியானவர்கள். அவர்கள் சட்டசபைக்கு வருவது அருமை. வந்தவர்களிலும் பலர் சபையிலேயே தூங்குவார்கள். சர்க்கார் கொரடாக்கள் எழுப்பிவிட்டதும் மந்திரிகளின் மசோதாக்களுக்குக் கைதூக்குவார்கள்.

எனவே, புதுக்கோட்டையின் சார்பாக ஆறு அங்கத்தினர்களைத் திருச்சி ஜில்லா போர்டுக்கு நியமனம் செய்யவேண்டும் என்ற பிரேரணைக்கும் வோட்டுக் கொடுத்தார்கள்.

இப்படிச் சர்க்கார் நியமிக்கும் புதுக்கோட்டை அங்கத்தினரைக் கொண்டு திருச்சி ஜில்லா போர்டில் ராஜா சிதம்பரம் கோஷ்டியை சிறுபான்மையாக்கி அவரை ஜில்லா போர்டு பதவியிலிருந்து நீக்க அதிகார வர்க்க காங்கிரஸார் பிரயத்தனம் செய்யலாம், என்று சட்டசபையில் ஒரு அங்கத்தினர் எச்சரித்தார். எனவே, ராஜா சிதம்பரத்தைக் கேட்டுக் கொண்டு அவர் ஒப்புக் கொள்ளும் புதுக்கோட்டை நபர்களையே நியமிக்க வேண்டும் என்றும் சொன்னார். இல்லாவிட்டால் பெரும் அநீதி செய்ததாகும் என்று வற்புறுத்தினார்.

இந்த அங்கத்தினர் பயந்தபடி நடந்தால், அது ராஜா சிதம்பரத்தின் யோகம் என்று நாம் கருதுகிறோம்.

காங்கிரஸ் அதிகாரவர்க்கத்தாரிடம் ஏற்கெனவே திருச்சிப் பொது மக்கள் கொண்டுள்ள அதிருப்தியை அது அதிகமாக்கும்.

ஆறு நியமன அங்கத்தினரைக் கொண்டு ராஜாசிதம்பரம் தோற்கடிக்கப்பட்டால், அவர் பாடு யோகந்தான். அடுத்து வரும் பொதுத் தேர்தலில் அவருடைய அபேட்சகர்கள் நிச்சயம் வெற்றி யடைவார்கள், என்று இப்போதே நாம் எழுதிக் கொடுத்து விடலாம்.

உண்மையில் செய்யவேண்டியது என்னவென்றால், ராஜா சிதம்பரத்தைப் போன்ற உண்மையான காங்கிரஸ் வாதிகளை மறுபடியும் காங்கிரஸ் ஸ்தாபனத்துக்குள் வரும்படி கேட்டு அழைத்துக் கொள்ளவேண்டும். ஆமாதாபாத் அ. இ. கா. கமிட்டி தீர்மானத்தின் கருத்தை நிறைவேற்றுவதாயிருந்தால், இப்படிச் செய்வதுதான் நியாயம். குறுக்கு வழியில் அவரை ஒழித்துக் கட்டிவிட நினைப்பது பெரும் பிசகு. காங்கிரஸ் ஸ்தாபனத்துக்கு அதனால் பலக் குறைவுதான் ஏற்படும்.

# தி யூனைடெட் கமர்ஷியல் பாங்க் லிட்.

**கல்கத்தா**

★

| | | |
|---|---|---|
| அங்கீகாரம் பெற்ற மூலதனம் | ... | ரூ. 8 கோடி |
| வாக்களிக்கப்பட்ட மூலதனம் | ... | ரூ. 4 கோடி |
| செலுத்தப்பட்ட மூலதனம் | .... | ரூ. 2 கோடி |
| ரிஸர்வ் நிதி | ... | ரூ. 60 லட்சம் |

★

போர்ட் ஆப் டைரக்டர்கள்:

**G. D. பிர்லா (சேர்மன்)**

ஈஸ்வரி பிரசாத் கோயங்கா
வைஸ் சேர்மன்
ரமண்லால் G. சரய்யா
வைஸ் சேர்மன்
அனந்த சரண் லா
பைஜ்நாத் ஜலான்
கோபிந்தலால் பங்கூர்
P. D. ஹிம்மத் ஸிங்கா
ராமேஷ்வர்லால் நோபானி
மகாதேவ் L. தனுகார்
மதன்மோகன் R. ருயா
மோஹன்லால் L. ஷா
மோதிலால் தபுரியா
நவீன்சந்திர மபத்லால்

ஜெனரல் மானேஜர்:

**B. T. தாகூர்**

★

இந்தியா, பர்மா, பாகிஸ்தான், மலேயா முதலிய தேசங்களின் முக்கிய பட்டணங்களிலும் நகரங்களிலும் கிளை ஆபீஸ்களுடன், உலகம் பூராவும் ஏஜன்ஸி ஸ்தாபனங்களுடன் கூடிய நமது பாங்க் சகலவிதமான பாங்க் அலுவல்களையும் முற்றிலும் திறமையாகச் சேவை செய்யுமாறு நிறுவப்பட்டிருக்கிறது.

## புத்தம் புதிய டிசைன்களில் ஸ்டாக்குகள் ஏராளமாக வந்துள்ளன

பல பல நவீன ரகங்களில் புத்தம் புதியவை. விலைகள் மிகவும் குறைக்கப் பட்டுள்ளன. இந்த விலை குறைவுச் சலுகை பதினைந்து நாட்களுக்கு மட்டுமே அமுலில் இருக்கும். ஜுவல் பதித்த கடிகாரங்கள் 10 வருட உத்திரவாதம் கொண்டவை.



புத்தா ரக அலாரம் 17/-

ஸ்பேஷல் 'ரேடியம்' 20/8/-
பாக்கெட் வாட்ச் 14/-



5 ஜுவல் ரேடியம்
செண்டர் செகண்டு 26/-
ரிஸ்ட்லெட் கார்டன் க்ரோமியம் 24/-
லேடீஸ் கவரண்டர் கப்ரிம் 32/-



15 ஜுவல் நீண்ட சதுர ஸ்பேஷல் 55/-
லேடீஸ் கோல்டன் டைமிங் சிறிய 33/-
தெண்டும்போன் பாரின் டேப் 41/-



க்ரோமியம் ரேடியம் 20/8/-
ஸ்பேஷல் கோல்டன் செண்டர் ஹேன்ட் 23/8/-

POSTAGE EXTRA. FREE ON TWO.

**STANDARD WATCH COMPANY**
POST BOX NO. 286. CALCUTTA-1




ஸ்ரீ கடாவ் மில்ஸ், பைகுளா, பம்பாய் 27. ஆபீஸ்: லக்ஷ்மி பில்டிங், பல்லார்டு பியர், பம்பாய். ஜவுளிக்கடை: மூல்ஜி ஜேதா மார்க்கெட், கோவிந்த் சௌக், பம்பாய் 2.

SISTA'S KM(S) - 17. - TAMIL.

# இணையுண்டோ நம் என்ஜினீர்களுக்கு?

புதுடில்லியில் சென்ற வாரத்தில் அகில உலக என்ஜினியரிங் கண்காட்சி நடந்தது. இந்தியாவின் பல மாகாணங்களிலிருந்தும் வெளி நாடுகளிலிருந்தும் என்ஜினியர்கள் வந்து என்ஜினியரிங் சம்பந்தமாகக் கண்காட்சிப் பகுதிகளை அமைத்தார்கள். என்ஜினியரிங் கலையானது இதுவரை சாதித்திருக்கும் அற்புதங்களைப் பற்றியும் அதனால் ஜனங்களுக்கு ஏற்பட்டிருக்கும் நன்மைகளைப் பற்றியும் மக்கள் நேரில் பார்த்து அறிந்து கொள்ளும் படியான காட்சிகளை ஏற்படுத்தினார்கள்.

அவ்வளவு காட்சிகளிலும் நமது சென்னை மாகாணத்துக் கண்காட்சிதான் தலைசிறந்து விளங்கியது. முக்கியமாக, மின்சார சக்தியை உண்டாக்கும் முறைகளும் அந்தச் சக்தியை மக்களுக்குப் பயன்படுத்தும் முறைகளும் மிகத் தெளிவாகப் பாமரர்கள் அறிந்து கொள்ளும் படியும் படித்தவர்கள் அதிசயிக்கும்படியும் தத்ரூபமாகக் காட்டப்பட்டிருந்தன. ஜனாதிபதி ராஜேந்திர பிரஸாத், பண்டித ஜவாஹர்லால் நேரு, ராஜாஜி முதலிய தலைவர்களும் அயல் நாட்டு என்ஜினியரிங் நிபுணர்களும் பார்த்து வியந்தார்கள். "எல்லாப் பகுதிகளுக்குள்ளேயும் சென்னைப் பகுதிதான் பிரமாதமாயிருக்கிறது! எல்லாரும் போய்ப் பாருங்கள்!" என்று பிரதம மந்திரி நேரு பார்லிமெண்ட் அங்கத்தினர் கூட்டத்தில் கூறினாராம். அதற்குப் பிறகு பார்லிமெண்ட் அங்கத்தினர்களும் விழித்துக் கொண்டு மேற்படி கண்காட்சிக்குச் சென்று கண்ணைக் கொட்டாமல் பார்த்து வியந்தார்களாம். பொது மக்களும் 'க்யூ' வரிசையில் காத்திருந்து போய்ப் பார்த்தார்களாம். மற்றப் பகுதிகளைக் காட்டிலும் சென்னைப் பகுதியிலேதான் ஜனங்களின் 'க்யூ' வரிசை அதிக நீளமாயிருந்ததாம். சென்னை நகரின் சில பகுதிகளில் அன்றொரு நாள் மின்சார சக்தி தடைபெற்று நின்றபோது, டில்லியில் மேற்படி பார்வையாளர்கள் கண் போட்டதனால் ஏற்பட்ட திருஷ்டி தான் என்றே நினைக்கும்படி யிருந்தது!

சென்னை என்ஜினியர்கள் வெகு காலமாகவே மிகத் திறமைசாலிகள் என்று பெயர் பெற்றிருக்கிறார்கள். ஆனால் சில வருஷத்துக்கு முன்னால் வரையில், தலைமை உத்தியோகங்களில் இருந்த ஆங்கிலேயருக்கே பெருமையெல்லாம் போய்க் கொண்டிருந்தது. சமீப காலத்தில் நம்மவர்களுக்கு அப்பெருமை வந்து கொண்டிருக்கிறது.

தற்போது நமது என்ஜினியரிங் இலாகாக்கள் இவ்வளவு நல்ல வேலை செய்து நல்ல பெயர் பெற்று வருவதற்கு நம் என்ஜினியர்களின் ஆற்றலைத் தவிர இன்னொரு காரணமும் உண்டு. சென்னையில் காங்கிரஸ் மந்திரி சபை ஏற்பட்ட நாளிலிருந்து என்ஜினியரிங் இலாகா ஒரு திறமைசாலியான மந்திரியின் நிர்வாகத்தில் தொடர்ந்து இருந்து வருகிறது. கனம் பக்தவத்ஸலம் தமது இலாகாவில் உள்ள உத்தியோகஸ்தர்கள் விஷயத்தில் திறமை ஒன்றுக்கே மதிப்புக் கொடுத்து வேறு எந்தக் காரணத்துக்கும் சலுகை காட்டாமல் நிர்வகித்து வருகிறார். ஆகையால் அநேக புதிய புதிய நீர்ப்பாசன—மின்சார திட்டங்கள் போடப்பட்டு வேலை நடந்து வருகிறது. இன்னும் கிருஷ்ணா—பெண்ணையாறு திட்டம் போன்றவை நிறைவேறிவிட்டால், இம்மாகாணத்தில் உணவு நெருக்கடியே தலைகாட்டாத நிலைமை கட்டாயம் ஏற்பட்டு விடக்கூடும்.

இத்தகைய அரிய காரியங்களைச் சாதித்து வரும் நமது மாகாண என்ஜினியர்களுக்கு ஒரு 'ஜே!' போடுவோம்.

# ஆங்கிலமே! அட அழகே!

சென்னை சர்க்காரின் கல்வி இலாகாவைச் சேர்ந்த ஒரு கிளைக் காரியாலயத்தில் சில வருஷத்துக்கு முன்னால் ஒரு 'லோயர் டிவிஷன்' குமாஸ்தா தம்மை 'அப்பர் டிவிஷன்' குமாஸ்தா ஆக்கவேண்டும் என்று மனுப் போட்டார். அவர் இருபத்திரண்டு வருஷம் ஸர்விஸ் ஆனவர். அவருக்குப் பின்னால் வந்தவர்கள் பலர் 'பிரமோஷன்' ஆகி மேலே போய் விட்டார்கள். இவர் மட்டும் இருபத்திரண்டு வருஷமாக ஒரே நாற்காலியில் உட்கார்ந்து தேய்த்து, ஒரே மேஜையை உபயோகித்து அந்த மேஜையில் எள் போட்டால் எள் விழாத படி மைப் பொட்டுக்களைச் சிந்தியிருந்தார்! இதன் காரணமாக, அந்த ஆபீஸில் இவர் இல்லாமல் எந்தக் காரியமும் நடப்பதில்லை. புதிய ஸூபரின்டெண்ட் யார் வந்தாலும் இவரிடம் கேட்டுத் தெரிந்து கொண்டுதான் தமது வேலையைச் செய்வது வழக்கம்.

கடைசியாக வந்த ஸூபரின்டெண்டு இவருடைய திறமையையும் அநுபவத்தையும் பார்த்து வியந்து 'பிரமோஷ'னுக்கு விண்ணப்பம் போடச் சொன்னார். அவரும் போட்டார். ஸூபரின்டெண்ட் மேற்படி மனுவின் பின்னால் ஒரு பக்கம் எழுதிச் சிபார்சு செய்து மேலே அனுப்பினார். இலாகாவின் உதவி டைரக்டர் "இந்த மனுவை ஒப்புக் கொண்டால் விபரீதம் வந்துவிடும்" என்று எழுதி, அதற்குக் காரணங்களை அரைப்பக்கம் எழுதினார். பிறகு இலாகாத் தலைவராகிய டைரக்டர் மனுவை அங்கீகரிப்பதற்குச் சாதகமாக முக்கால் பக்கம் எழுதினார்.

பிறகு, அம் மனு கல்வி இலாகா காரியதரிசியான ஐ. ஸி. எஸ். காரரிடம் போயிற்று. அவர் திவ்யமான விக்டோரியா காலத்து இங்கிலீஷ் நடையைக் கையாண்டு, 'இத்தகைய கேஸ்களில் விதிகளைத் தளர்த்திவிட வேண்டியதுதான்' என்று சொல்லி, பிளேட்டோ முதல் மார்ட்



உலக இன்ஜினியரிங் கண்காட்சியில் நமது சென்னைப் பகுதியைப் பண்டித ஜவாஹர்லால் நேரு பார்வையிடுகிறார்.

வேலை வரையில் சொல்லியிருப்பதை எடுத்துக் காட்டி ஒரு அரிய கட்டுரை வரைந்து அனுப்பினார். அதை வரவு செலவு இலாகா காரியதரிசி இன்னொரு ஐ. ஸி. எஸ். பார்த்துவிட்டு, அவ்வளவு வாதங்களையும் சின்னாபின்னப் படுத்தி இரண்டு பக்கம் எழுதியதுடன், ஷேக்ஸ்பியர் நாடகத்திலிருந்து மேற்கோளும் காட்டியிருந்தார். சென்னை அரசாங்கத்தின் தலைமைக் காரியதரிசி (சீப் ஸெக்ரடரி)க்கு மேற்படி விஷயம் போனபோது தஸ்தவேஜுக் கட்டை ஒரு பியூன் தூக்க முடியாமல் இரண்டு பேர் தூக்கிக்கொண்டு வைத்தார்கள். அவர் "இந்த ஐ. ஸி. எஸ். காரியதரிசி சொல்வதிலும் உண்மையிருக்கிறது. மற்றொருவர் சொல்வதிலும் நியாயம் இருக்கிறது. ஆகவே, கல்வி இலாகா மந்திரிதான் முடிவு செய்யவேண்டும்" என்று எழுதிவிட்டு, பிளேட்டோவின் எடுத்துக் காட்டிலும் ஷேக்ஸ்பியர் எடுத்துக் காட்டிலும் மேற்படி காரியதரிசிகள் செய்துள்ள சிறு பிழைகளைச் சுட்டிக் காட்டியிருந்தார். பக்கத்தில் மேற்படி ஆசிரியர்களின் புத்தகங்களை வைத்துக்கொண்டு சரி பார்த்துவிட்டு யாதாஸ்து எழுதுவது நல்லது என்றும் சொல்லியிருந்தார்!

கல்வி மந்திரி புதியவர். ஆகையால் "நமக்கு என்னத்திற்கு இந்தப் பொறுப்பு!" என்று பிரதம மந்திரிக்கு அனுப்பினார். பிரதம மந்திரி தமது அந்தரங்கக் காரியதரிசியின் குறிப்ப ப்யாட்டி மந்திரி சபையிலேயே அதை வைத்து விட்டார். மந்திரி சபையில் ஒருவர் மனுதாரராகிய குப்புசாமி என்பவரின் பெயர் சந்தேகாஸ்பதமாயிருக்கிறதென்றும், அவருடைய சாதி தெரிந்தால் நல்லது என்றும் கூறினார். அதன்பேரில் தஸ்தவேஜுக் கட்டு புனராலோசனைக்காக அனுப்பப்பட்டது. மறுபடியும், காரியாலய சூபரின்டென்டிலிருந்து மந்திரி சபை வரையில் தஸ்தவேஜுக் கட்டு பிரயாணம் செய்தது. யாதாஸ்துகள் சேர்ந்து சேர்ந்து ஒரு பாரம் நிறையுள்ளதாகி விட்டது. கடைசியாக, மந்திரி சபை, "பிரமோஷன் இல்லை" என்று தீர்மானித்தது. அதற்குள் மேற்படி குமாஸ்தாவின் உத்தியோக காலம் முடிந்து பென்ஷன் பெற்றுக்கொண்டு ரிடையர் ஆகிவிட்டார். அவருடைய பிரமோஷனைப் பற்றிய தஸ்தவேஜுக் கட்டு ஒரு பீரோவை அடைத்துக்கொண்டு இன்னமும் மேற்படி காரியாலயத்தில் இருந்து வருகிறது.

மேற்படி குப்புசாமியின் மனுவை ஒப்புக் கொண்டு லோயர் டிவிஷன் குமாஸ்தா பதவியிலிருந்து அப்பர் டிவிஷன் குமாஸ்தா பதவிக்குத் தூக்கிப் போட்டிருந்தால் மாதம் பதினைந்து ரூபாய் அதிகச் சம்பளம் கொடுக்க நேர்ந்திருக்கும். மூன்று வருஷங்களில் சுமார் அறநூறு ரூபாய்தான் சர்க்காருக்கு அதிகச் செலவாகியிருக்கும்.

மேற்படி கடிதப்போக்கு வரவில் ஐ. ஸி. எஸ். உத்தியோகஸ்தர்களும் மந்திரிகளும் செலவு செய்த நேரத்துக்கு அவர்கள் வாங்கியிருக்கும் சம்பளத்தைக் கணக்கிட்டுப் பார்த்தால் குறைந்தபட்சம் பதினாயிரம் ரூபாய் செலவாகியிருக்கிறதென்று மதிப்பிடலாம்!

எப்படியிருக்கிறது சர்க்கார் இலாகாக்களின் காரிய நடைமுறை!

இந்த நிகழ்ச்சியை மனதில் வைத்துக்கொண்டு, புதுடில்லி மத்திய சர்க்கார் செக்ரட்டேரியட்டில் வீண் வேலையைக் குறைப்பது பற்றி ஸ்ரீ அனந்தசயனம் ஐயங்கார் கமிட்டியின் பொர்களைப் படிக்கவேண்டும். மேற்படி கமிட்டியார், பைல்களில் பல உத்தியோகஸ்தர்கள் வளர்த்து வளர்த்துக் குறிப்பு எழுதுவதினால் காலமும் பணமும் வீண் விரயம் ஆவதாகக் குறிப்பிட்டிருக்கிறார்கள். அது மட்டுமல்ல; சில ஐ. ஸி. எஸ். காரியதரிசிகள் ஆங்கில நடை விஷயத்தில் மிக்க கவனம் செலுத்தி, நீண்ட குறிப்பு எழுதுகிறவர்களின் நடையைத் திருத்தி அழகுபடுத்துகிறார்களாம்! "அட கஷ்ட காலமே! அழகான இங்கிலீஷ் எழுதுவதற்காகவா இவர்களுக்கு மூவாயிரம், நாலாயிரம் சம்பளம் கொடுக்கிறோம்!" என்று கமிட்டியார் கேட்டிருக்கிறார்கள். காலஞ்சென்ற மெக்காலேயின் ஆவிக்கு மட்டும் இது தெரியுமானால், அது மறுபடியும் தூக்குப் போட்டுக்கொண்டு இன்னொரு தடவை உயிரை விடும் என்பதில் சந்தேகமில்லை! நல்ல அழகான இங்கிலீஷ் எழுதுவதற்கு இல்லாவிட்டால் வேறு எதற்காகத்தான் மூவாயிரம் நாலாயிரம் சம்பளம் கொடுக்கிறதாம்! நல்ல இங்கிலீஷ் தேவை இல்லையென்றால் சாதாரண காரியாலய குமாஸ்தாக்களே விஷயங்களைப் பைஸல் செய்து விடுவார்களே!

எந்த விஷயத்தையும் ஒரு இலாகாவின் உதவிக் காரியதரிசி, பிறகு காரியதரிசி, இன்னொரு இலாகாவின் உதவிக் காரியதரிசி, பிறகு அந்த இலாகா காரியதரிசி இப்படிப் பலர் குறிப்பு எழுதிப் பைஸல் செய்யவேண்டியிருப்பதால் காலதாமதம் ஆவதோடு யாருக்கும் பொறுப்பு இல்லாமல் போகிறது என்றும்

மேற்படி கமிட்டியார் கூறியிருக்கிறார்கள்! அட கடவுளே! இதுகூடத் தெரியாதா! எந்தக் காரியத்தையும் சீக்கிரத்தில் பைசல் செய்யக்கூடாது, யாருக்கும் தனிப் பொறுப்பு இருக்கக்கூடாது என்பதுதானே அதிகார வர்க்கத்தின் நாலு வேத ஆறு சாஸ்திர பதினென் புராண அடிப்படைக் கொள்கை! அதனால்தானே அன்னிய நாட்டிலிருந்து இரசாயன எரு வாங்கியதில் ஏற்பட்ட ஒரு கோடி ரூபாய் நஷ்டத்துக்கு யார் பேரிலும் குறிப்பாகப் பொறுப்புக் கட்ட முடியவில்லை!

அதிகார வர்க்கமே! உனக்கு இந்தக் கதியா ஏற்பட்டு விட்டது! ஆங்கிலமே! அழகான ஆங்கிலமே! உன்னை இப்படியா அலட்சியம் செய்கிறார்கள்! "கலி முற்றி விட்டது!" என்பதில் சந்தேகம் என்ன!

# யாழ்ப்பாணத்தில் காந்திஜி சிலை

**ரஜனி**

கொழும்பு, பிப்ரவரி 16வ.

யாழ்ப்பாணம் முனிசிபல் சபை கேட்டுக் கொண்டதற் கிணங்க முனிசிபல் கமிஷனர் ஸ்ரீ கே. ஷண்முகம் இவ்வாரம் நகர மண்டபத்தில் ஒரு பொதுக் கூட்டத்தை நடத்தினர். அப்பொழுது மகாத்மாஜியின் ஞாபகார்த்தமாக யாழ்ப்பாணத்தில் நடு நாயகமாயுள்ள ஒரு இடத்தில் காந்திஜி சிலை யொன்றைப் பிரதிஷ்டை செய்ய வேண்டுமென்று பொது ஜனங்கள் விரும்புவதாக ஸ்ரீ ஷண்முகம் ஒரு தீர்மானத்தைப் பிரேரேபித்தார். காந்திஜியின் அரும்பெரும் சேவைகளைப்பற்றிப் பலர் பேசியபின் தீர்மானம் ஏகமனதாக நிறைவேற்றப் பட்டது. தீர்மானத்தை அமுல் நடத்த ஒரு கமிட்டியும் நியமிக்கப் பட்டது.

மிற்க, சென்னைக் கடற்கரையில் நிறுவப் படவிருக்கும் காந்திஜி ஞாபகார்த்தச் சிலைக்கு இலங்கையிலிருந்து பண வசூல் செய்து அனுப்ப ஸ்ரீ எஸ். தொண்டமான் தலைமையில் ஒரு கமிட்டி நியமிக்கப்பட்டிருந்தது. இந்தக் கமிட்டி ஏற்பட்டவுடன் ஸ்ரீ தொண்டமான் மேனாடுகளுக்குச் செல்ல நேரிட்டுவிட்ட படியினால் கமிட்டி ஒரு அலுவலும் செய்ய முடியவில்லை. அடுத்த வாரம் கமிட்டியின் முதலாவது கூட்டத்தை நடத்தித் தீவிரமாகப் பண வசூல் செய்வதென்று உத்தேசித்திருக்கிறார்கள்.

## தமிழ் விழாவுக்கு ஏற்பாடு

இவ்வாரம் தமிழ் விழா யாழ்ப்பாணக் கமிட்டியின் கூட்ட மொன்று யாழ்ப்பாணம் வைத்தீஸ்வர வித்தியாலய மண்டபத்தில் ஸ்ரீ க. நடேசப் பிள்ளையின் தலைமையின் கீழ் நடைபெற்றது. விழாவின் பொழுது ஒரு மலர் வெளியிடுவதென்று தீர்மானிக்கப்பட்டு அதற்கு முதலியார் சின்னத் தம்பியை கன்வீனராகக் கொண்ட ஒரு ஆசிரியக் குழுவைக் கூட்டம் நியமித்தது. மகா நாட்டுப் பந்தலுக்கு ஏற்பாடுகள் செய்ய ஸ்ரீ எஸ். சிவபாத சுந்தரமும் சாப்பாட்டு வசதிகளைக் கவனிக்க ஸ்ரீ டி. கே. ராஜ சேகரனும் பிரசார விஷயங்களைக் கவனித்துக் கொள்ள ஸ்ரீ ராஜ அரிய ரத்தினமும் நியமிக்கப் பட்டார்கள். தொண்டர் படைக்கு ஒழுங்குகள் செய்யும் பொறுப்பு திருவாளர்கள் என். தம்பிரத்தினம், எஸ். கே. வேலாயுதப் பிள்ளை ஆகியோர்களிடமும் கண்காட்சிக்கு ஏற்பாடு செய்வது ஸ்ரீ எஸ். ஆர். கனகசபையிடமும் விடப்பட்டன. இம்மாதம் 27-ம் தேதி கொழும்பில் ஒரு பிரம்மாண்டமான பொதுக்கூட்டம் நடத்த ஏற்பாடு செய்திருக்கிறார்கள்.

## ஸ்ரீ நரஸிம்மன் விஜயம்

தென்னிந்திய பத்திரிகையாளர் சம்மேளன காரியதரிசியும் ஹிந்து பத்திரிகையின் உதவியாசிரியருமான ஸ்ரீ வ. கே. நரஸிம்மன் இலங்கைக்கு விஜயம் செய்திருக்கிறார். அவர் இங்குள்ள பல இந்தியத் தலைவர்களையும் சிங்களத் தலைவர்களையும் சந்தித்து இலங்கை இந்தியர் பிரச்னையை ஆராய்ந்து வருகிறார். இந்தியர் பிரச்னை தற்போதுள்ள நிலைமையில் நீடித்திருப்பது இரு நாடுகளுக்கும் நல்லதல்லவென்றும் இதற்கு ஒரு பரிகாரம் தேடவேண்டுமென்றும் அவர் ஒரு பேட்டியில் சொன்னார். இந்திய ஹைகமிஷனர் ஸ்ரீ என். இ. எஸ். ராகவாச்சாரி இலங்கை இந்திய காங்கிரஸ் தலைவர்களான ஸ்ரீ கே. ராஜலிங்கம், எஸ். தொண்டமான், உதவி கல்வி மந்திரி ஸ்ரீ கே. கனகரத்தினம் முதலியோர்களையெல்லாம் அவர் சந்தித்துப் பேசினார்.

## இந்திய வர்த்தகச் சங்க அறிக்கை

இந்திய வர்த்தகச் சங்கம் இவ்வாரம் ஒரு பத்திரிகை நிருபர்கள் மகாநாடு கூட்டி இலங்கையர் மயமாக்கும் திட்டத்தில் தாங்கள் கையொப்பமிட்ட காரணங்களைச் சொன்னார்கள். இந்திய அரசாங்கத்தைக் கலந்து கொள்ளாமல் ஏராளமான இந்தியர்களைப் பாதிக்கக் கூடிய ஒப்பந்தத்தில் ஏன் கையொப்ப மிட்டார்களென்று கேட்டதற்கு வியாபார விஷயங்களில் இந்திய சர்க்காரைக் கலந்து கொள்ளும் அவசிய மிருப்பதாகத் தாங்கள் கருதவில்லையென்று அவர்கள் பதிலளித்தனர். 1949-ம் வருட ஜூலை மாதத்துக்குப் பிறகு வேலைக்கு அமர்த்திக் கொண்டவர்களை வேலை நீக்கம் செய்ய ஒப்புக் கொண்ட நீங்கள் அதற்கு முன்பு வேலைக்கு அமர்த்திக் கொண்டவர்களுக்கெல்லாம் வாச பர்மிட்டு கொடுக்க வேண்டுமென்ற ஒரு ஷரத்தையும் உடன்படிக்கையில் ஏன் சேர்க்கவில்லையென்று கேட்டபொழுது இதுமாதிரி ஷரத்தைச் சேர்க்க எந்த அரசாங்கமும் சம்மதிக்காதென்று பதில் சொன்னார்கள். அவர்களுடைய சிரத்தையெல்லாம் முதலாளிகளைப் பாதுகாப்பது ஒன்றுதானே தவிர ஏழை இந்தியச் சிப்பந்திகள் எக்கேடு கெட்டாலும் எங்களுக்குக் கவலையில்லையென்பது போலிருக்கிறது.

# பொன்னியின்




அத்தியாயம் 38

## நந்தினியின் ஊடல்

பெரிய பழுவேட்டரையர் கடைசியாகத் தமது மாளிகைக்குத் திரும்பியபோது நள்ளிரவு கழிந்து மூன்றாவது ஜாமம் ஆரம்பமாகியிருந்தது. வீதிப்புழுதியை வாரி அடித்துக்கொண்டு சுழன்று சுழன்று அடித்த மேலக் காற்றைக் காட்டிலும் அவருடைய உள்ளத்தில் அடித்த புயல் அதிக புழுதியைக் கிளப்பியது. அருமைச் சகோதரனை அவ்வளவு தூரம் கடிந்து கொள்ள வேண்டியிருந்தது பற்றிச் சிறிது பச்சாத்தாபப் பட்டார். அவர்மீது தம்பி வைத்திருந்த அபிமானத்துக்கு அளவேயில்லை. அந்த அபிமானத்தின் காரணமாகத்தான் ஏதோ சொல்லி விட்டான். இருந்தாலும் சந்தேகக்காரன். எதற்காக அநாவசியமாய் நந்தினியைப் பற்றிக் குறை கூற வேண்டும்? மனித சுபாவம் அப்படித்தான் போலும். தான் செய்த தவறுக்குப் பிறர் பேரில் குற்றம் சொல்லித் தப்பித்துக்கொள்ள முயல்வது சாதாரண மக்களின் இயற்கை. ஆனால் இவன் எதற்காக அந்த இழிவான முறையைக் கடைப்பிடிக்க வேண்டும்? கைவசம் சிக்கியிருந்த அந்த மோசக்காரத் திருட்டு வாலிபனை விட்டு விட்டு, அதற்காக ஒரு பெண்ணின் பேரில், அதுவும் மதனியின் பேரில் குற்றம் சொல்லுவது இவனுடைய வீரத்துக்கும் ஆண்மைக்கும் அழகாகுமா? போனால் போகட்டும்! அதற்காகத்தான் அவன் வருந்தி மன்னிப்பும் கேட்டுக்கொண்டு விட்டானே? மேலும் அதைப் பற்றி நாம் எதற்காக நினைக்க வேண்டும்?

இருந்தாலும், அவன் கூறியதில் அணுவளவேனும் உண்மை இருக்கக் கூடுமா? ஒரு வேளை இந்த முதிய பிராயத்தில் நமக்குப் பெண் பித்துத்தான் பிடித்திருக்குமோ? எங்கேயோ காட்டிலிருந்து பிடித்து வந்த ஒரு பெண்ணுக்காக, கூடப் பிறந்த சகோதரனை, நூறு போர்க்களங்களில் நமக்குப் பக்க பலமாயிருந்து போரிட்டவனை, பல முறை தன் உயிரைப் பொருட்படுத்தாமல் நமக்கு வந்த அபாயத்தைத் தடுத்துக் காத்தவனையல்லவா கடிந்து கொள்ள வேண்டியிருந்தது? அப்படி என்ன அவள் உயர்த்தி? அவளுடைய பூர்வோத்திரம் நமக்குத் தெரியாது. அவளுடைய நடவடிக்கையும் பேச்சும் சில சமயம் சந்தேகத்துக்கு இட-

# செல்வன்

மாகத்தான் இருக்கின்றன. சீச்சீ! தம்பியின் வார்த்தை நம் உள்ளத்திலும் இத்தகைய குழப்பத்தை உண்டாக்கி விட்டதே! என்ன அநியாயம்? அவள் எப்படி நம்மிடம் உயிர்க் குயிரான அன்பு வைத்திருக்கிறாள்? எவ்வளவு மட்டு மரியாதையுடன் நடந்து கொள்ளுகிறாள்? நம்முடைய காரியங்களில் எல்லாம் எவ்வளவு உற்சாகம் காட்டுகிறாள்? சில சமயம் நமக்கு யோசனைகள் கூடச் சொல்லி உதவுகிறாளே? இந்த அறுபது வயதுக்கு மேலான கிழவனைத் துணிந்து மணந்து கொண்டாளே, அதைப் பார்க்க வேண்டாமா? தேவலோக மாதரும் பார்த்துப் பொறாமைப் படும் படியான அந்த சுந்தரிக்குச் சுயம்வரம் வைத்தால், சொர்க்கத்திலிருந்து தேவேந்திரன் கூட ஓடி வருவானே? இந்த உலகத்து மணிமுடி வேந்தர் யார்தான் அவளை மணந்து கொள்ள ஆசைப்பட மாட்டார்கள்? ஆ! இந்தச் சுந்தர சோழன் கண்ணில் அவள் அகப்பட்டிருந்தால் போதுமே? அப்படிப்பட்டவளைப்பற்றி எந்த விதத்திலும் ஐயப்படுவது எவ்வளவு மடமை? இளம் பெண்ணை மணந்து கொண்ட கிழவர்களுக்கு இல்லாத சந்தேகங்கள் எல்லாம் தோன்றி வாழ்க்கையை நரகமாக்கிக் கொள்வார்கள் என்று கேள்விப் பட்டிருக்கிறோம். உலக வாழ்க்கையில் அத்தகைய உதாரணங்களைப் பார்த்துமிருக்கிறோம். அம்மாதிரி ஊரார் சிரிப்பதற்கு நம்மை நாமே இடமாக்கிக் கொள்வதா?

இருந்த போதிலும் சிற்சில விவரங்களை அவளுடைய வாய்ப் பொறுப்பில் கேட்டறிந்து கொள்வதும் அவசியந்தான். அடிக்கடி முத்திரை மோதிரம் வேண்டும் என்று கேட்டு வாங்கிக் கொள்கிறாளே எதற்காக? அடிக்கடி தன்னந்தனியாக லதா மண்டபத்தில் போய் உட்கார்ந்து கொள்ளுகிறாளே, அது எதற்கு? யாரோ ஒரு மந்திரவாதி அடிக்கடி அவளைப் பார்க்க வருகிறதாகக் கேள்விப் படுகிறோமே, அவளே ஒப்புக் கொண்டாளே, அது எதற்காக? மந்திரவாதியிடம் இவள் என்னத்தைக் கேட்டறியப் போகிறாள்? மந்திரம் போட்டு இவள் யாரை வசப்படுத்த வேண்டும்? இதெல்லாம் இருக்க, கலியாணம் பண்ணியும் பிரம்மச்சாரி என்ற நிலையில் என்னை எத்தனை காலம் வைத்திருக்கப் போகிறாள்? ஏதோ விரதம், நோன்பு என்று சொல்கிறாளே தவிர, என்ன விரதம், என்ன நோன்பு என்று விளங்கச் சொல்கிறாள் இல்லை! கதைகளிலே வரும் தந்திரக்காரப் பெண்கள் தட்டிக் கழிக்கக் கையாளும் முறையைப் போலத்தானே இருக்கிறது? அதற்கு இனிமேல் இடம் கொடுக்கக் கூடாது! இன்றிரவு அதைப்பற்றிக் கண்டிப்பாகப் பேசித் தீர்த்துக் கட்டி விட வேண்டியதுதான்!

கல்கி

**ப**ழுவேட்டரையர் அவருடைய மாளிகை வாசலுக்கு வந்தபோது அரண்மனைப் பெண்டிரும் ஊழியர்களும் தாதியர்களும் காத்திருந்து வரவேற்றார்கள். ஆனால் அவருடைய கண்கள் சுற்றிச் சுழன்று பார்த்தும் அவர் பார்க்க விரும்பிய இளைய ராணியை மட்டும் காணவில்லை. விசாரித்ததில், இன்னும் லதா மண்டபத்தில் இருப்பதாகத் தெரிய வந்தது. அவர் மனதில் "நள்ளிரவு ஆன பிறகும் அங்கு இவளுக்கு என்ன வேலை?" என்ற கேள்வியுடன், தம்மை அலட்சியம் செய்கிறாளோ என்ற ஐயமும் கோபமும் எழுந்தன. சிறிது ஆத்திரத்துடனேயே கொடி மண்டபத்தை நோக்கிச் சென்றார்.

இவர் கொடி மண்டப வாசலை அடைந்தபோது நந்தினியும் அவளுடைய தோழியும் எதிரே வருவதைக் கண்டார். அப்படி வந்தவள் இவரைக் கண்டதும் நின்று, அவரைப் பார்க்காமல், தோட்டத்தில் குடி கொண்டிருந்த இருளை நோக்கத்

தொடங்கினாள். தாதிப் பெண் சற்று அப்பாலேயே நின்று விட்டாள்.

பழுவேட்டரையர் நந்தினியின் அருகில் வந்த பின்னரும் அவள் அவரைத் திரும்பிப் பார்க்கவில்லை. நந்தினியைக் கடிந்து கொள்ளலாம் என்று எண்ணிக்கொண்டு வந்ததற்கு மாறாக அவளுடைய கோபத்தை இவர் தணிக்க முயல வேண்டியதாயிற்று!

"நந்தினி! என் கண்மணி! என்ன கோபம்? ஏன் பாராமுகம்?" என்று கேட்டுக் கொண்டு, தம் இரும்பை யொத்த கையை அவளுடைய தோளின் மீது மிருதுவாக வைத்தார்.

நந்தினியோ மலரினும் மிருதுவான தன் கர மலரினால் அவருடைய வஜ்ராயுதத்தை யொத்த கையை ஒரு தள்ளுத் தள்ளினாள். அம்மம்மா! மென்மைக்கும் மிருதுத் தன்மைக்கும் இத்தனை பலமும் உண்டா?

"என் உயிரே! உன் பட்டுக் கையினால் தொட்டு என்னைத் தள்ளினாயே, அதுவே என் பாக்கியம்! இமயமலையிலிருந்து விந்திய மலை வரையில் உள்ள வீராதிவீரர் யாரும் செய்ய முடியாத செயலை நீ செய்தாய்! அது என் அதிர்ஷ்டம்! என்றாலும், எதற்குக் கோபம் என்று சொல்ல வேண்டாமா? உன் தேன் மதுரக் குரலைக் கேட்க என் காது தாபம் அடைந்து தவிக்கின்றதே!" என்று கெஞ்சினார் ஆயிரம் போர்க்களங்களில் வெற்றி கண்ட அந்த மகா வீரர்.

"தாங்கள் என்னைப் பிரிந்து போய் எத்தனை நாள் ஆயிற்று? முழுமையாக நாலு நாள் ஆகவில்லையா?" என்று சொன்ன நந்தினியின் குரலில் விம்மல் தொனித்தது. அது எத்தனையோ வாள்களையும் வேல்களையும் தாங்கி நின்றும் தளராத பழுவேட்டரையரின் நெஞ்சத்தை அனலில் இட்ட மெழுகைப் போல் உருக்கிவிட்டது.

"இதற்காகத்தானா இவ்வளவு கோபம்? நாலு நாள் பிரிவை உன்னால் சகிக்க முடியவில்லையா? நான் போர்க்களத்துக்குப் போக நேர்ந்தால் என்ன செய்வாய்? மாதக் கணக்காகப் பிரிந்திருக்க நேரிடுமே?" என்றார்.

"தாங்கள் போர்க்களத்துக்குப் போனால் மாதக்கணக்கில் தங்களை நான் பிரிந்திருப்பேன் என்று எண்ணினீர்களா? அந்த எண்ணத்தை மாற்றிக் கொள்ளுங்கள். தங்களுடைய நிழலைப் போல் தொடர்ந்து நானும் போர்க்களத்துக்கு வருவேன்......"

"அழகாயிருக்கிறது! உன்னைப் போர்க்களத்துக்கு அழைத்துப் போனால் நான் யுத்தம் பண்ணினாற் போலத்தான்! கண்மணி! இந்த மார்பும் தோள்களும் எத்தனையோ கூரிய அம்புகளையும் வேல் முனைகளையும் தாங்கியதுண்டு. அவ்வாறு ஏற்பட்ட காயங்கள் 64 என்று உலகோர் என்னைப் புகழ்வதுமுண்டு. ஆனால் உன்னுடைய மிருதுவான மலர் மேனியில் ஒரு சிறு முள் தைத்து விட்டால், என்னுடைய நெஞ்சு பிளந்து போய் விடும். எத்தனையோ வாள்களும் வேல்களும் என்னைத் தாக்கிச் சாதிக்க முடியாத காரியத்தை உன் காலில் தைக்கும் சிறிய முள் சாதித்து விடும். உன்னை எப்படி யுத்தகளத்துக்கு அழைத்துப் போவேன்? நீ இத்தனை நேரம் கருங்கல் தரையில் நின்று கொண்டிருப்பதே எனக்கு வேதனையாயிருக்கிறது. இப்





படி வா! வந்து உன் மலர்ப் படுக்கையில் வீற்றிரு! உன் திருமுகத்தைப் பார்க்கிறேன். நாலு நாள் பிரிவு உனக்கு மட்டும் வேதனை அளித்தது என்று நினையாதே! உன்னைக் காணாத ஒவ்வொரு கணமும் எனக்கு ஒரு யுகமாயிருந்தது. இப்போதாவது என் தாபம் தீர, உன் பொன் முகத்தைப் பார்க்கிறேன்!" என்று கூறி, நந்தினியின் கரத்தைப் பற்றி அழைத்துக் கொண்டு போய் மஞ்சத்தில் உட்கார வைத்தார்.

நந்தினி தன் கண்களைத் துடைத்துக் கொண்டு பழுவேட்டரையரை நிமிர்ந்து பார்த்தாள். தங்க விளக்கின் பொன்னொளியில் அவளுடைய முகத்தில் மலர்ந்த முத்து முறுவலைப் பார்த்தார் தனாதிகாரி. ஆகா! இந்தப் புன்சிரிப்புக்கு மூன்று உலகத்தையும் கொடுக்கலாமே? மூன்று உலகமும் நம் வசத்தில் இல்லாதபடியால், நம் உடல் பொருள் ஆவி மூன்றையும் இவளுக்காகத் தத்தம் செய்யலாம்! ஆனால் இவளோ நம்மிடம் ஒன்றும் கேட்கிறாள் இல்லை! — இவ்விதம் எண்ணினார் அந்த வீராதி வீரர். அவளைக் கேள்வி கேட்பது, கடிந்து கொள்வது என்கிற உத்தேசம் போயே போய்விட்டது! நந்தினி காலால் இட்ட பணியைத் தலையால் நடத்தி வைக்கும் நிலைமைக்கு வந்து விட்டார்! எந்தவித அடிமைத் தனமும் பொல்லாததுதான்! ஆனால் பெண்ணடிமைத் தனத்தைப் போல் ஒருவனை மதி இழக்கச் செய்வது வேறொன்றுமில்லை!

"நாலு நாள் வெளியூரில் இருந்து விட்டுத்தான் வந்தீர்களே? திரும்பி வந்தவுடனே நேரே என் இங்கு வரவில்லை? என்னைவிடத் தங்களுக்குத் தங்கள் தம்பிதானே முக்கியமாகி விட்டார்!" என்று கேட்டாள் நந்தினி. கேட்டு விட்டுக் கள்ளக் கோபத்துடன் அவரைக் கடைக்கண்ணால் பார்த்தாள்.

"அப்படியில்லை, என் கண்மணி! வில்லிலிருந்து புறப்பட்ட பாணத்தைப் போல் உன்னிடம் வருவதற்குத்தான் என் மனம் ஆசைப்பட்டது. ஆனால் அந்த அசட்டுப் பிள்ளை — மதுராந்தகன் — சுரங்க வழியின் மூலமாகப் பத்திரமாகத் திரும்பி வந்து சேர்ந்தானா என்று தெரிந்து கொள்வதற்காகவே தம்பியின் வீட்டில் தாமதிக்க வேண்டியதாயிற்று......"

"ஐயா! தாங்கள் எடுத்த காரியங்களிலெல்லாம் எனக்குச் சிரத்தை உண்டு. தங்கள் முயற்சி அனைத்தும் வெற்றி பெறவேண்டுமென்றுதான் நானும் ஆசைப்படுகிறேன். ஆனாலும் நான் ஏற வேண்டிய மூடு பல்லக்கில் ஓர் ஆண் பிள்ளையைத் தாங்கள் ஏற்றிக் கொண்டு போவதை நினைத்தால் எனக்குக் கஷ்டமாயிருக்கிறது. நாடு நகரங்களில் உள்ள ஜனங்கள் எல்லோரும், தாங்கள் போகுமிடமெல்லாம் என்னையும் கூட அழைத்துப் போவதாக எண்ணுகிறார்கள்......"

"அது எனக்கு மட்டும் சந்தோஷமளிக்கிறது என்று நினைக்கிறாய்? இல்லவே இல்லை! ஆனால் எடுத்த காரியம் பெரிய காரியம். அதை நிறைவேற்றுவதற்காகச் சகித்துக்கொண்டு செய்கிறேன். மேலும், இந்த யோசனை கூறியதே நீதான் என்பதை மறந்து விட்டாயா? உன்னுடைய மூடு பல்லக்கில் மதுராந்தகனை அழைத்துப் போகும்படி நீதானே சொன்னாய்? கோட்டையிலிருந்து போகும்போதும் வரும்போதும் அவனைத் தனியாகச்




சுரங்க வழியில் அனுப்பும் யுக்தியையும் நீதானே கூறினாய்?......"

"என்னுடைய கடமையைத்தான் செய்தேன். கணவர் எடுத்திருக்கும் காரியத்துக்கு உதவி செய்வது மனைவியின் கடமை அல்லவா? ஏதோ எனக்குத் தெரிந்த யுக்தியைச் சொன்னேன். தங்களுக்கு அதனால்......"

"அது மட்டுமா செய்தாய்? இந்த மதுராந்தகன் உடம்பெல்லாம் விபூதியைப் பூசிக்கொண்டு ருத்ராட்ச மாலையை அணிந்து நமசிவாய ஜபம் செய்து கொண்டிருந்தான்! கோவில், குளம் என்று சொல்லிக்கொண்டு, 'அம்மாவுக்குப் பிள்ளை நான்தான்' என்பதை நிரூபித்துக் கொண்டிருந்தான்! அரசாள்வதில் ஆசை உண்டாக்க நாங்கள் எவ்வளவோ முயன்றும், முடியவில்லை. இரண்டு தடவை நீ அவனுடன் பேசினாய்; உடனே மாறிப் போய்விட்டான். இப்போது அவனுக்கு உள்ள இராஜ்ய ஆசையைச் சொல்லி முடியாது. தற்போது அவனுடைய மனோராஜ்யம் இலங்கையிலிருந்து இமயமலை வரையில் பரவி இருக்கிறது! பூமியிலிருந்து ஆகாசம் வரையில் வியாபித்திருக்கிறது. நம்மைக் காட்டிலும் அவனுக்கு அவசரம் தாங்கவில்லை. சோழ சிம்மாசனத்தில் ஏறத் துடித்துக் கொண்டிருக்கிறான். நந்தினி! அந்தப் பிள்ளை விஷயத்தில் நீ என்ன மாய மந்திரம் செய்தாயோ, தெரியவில்லை!...... ஆமாம், நீதான் இப்படிப்பட்ட மாய மந்திரக்காரியாயிருக்கிறாயே? வேறு மந்திரவாதியை நீ ஏன் அழைக்கிறாய்? அதைப்பற்றி அநாவசியமாக ஜனங்கள்......"

"அரசே! அதைப் பற்றி அநாவசியமாக யாரேனும் பேசினால், அப்படிப் பட்ட துஷ்டர்களின் நாக்கைத் துண்டித்துப் புத்தி கற்பிப்பது தங்கள் பொறுப்பு. மந்திரவாதியை நான் ஏன் அழைக்கிறேன் என்பதை முன்னமே சொல்லியிருக்கிறேன். தாங்கள் மறந்திருந்தால், இன்னொரு தடவையும் சொல்லுகிறேன். பழையாறையிலுள்ள அந்தப் பெண் பாம்பின் விஷத்தை இறக்குவதற்காகத் தான். நீங்கள் ஆண்மை உள்ள புருஷர்கள். யுத்தகளத்தில் நேருக்கு நேர் நின்று ஆண் பிள்ளைகளோடு போரிடுவீர்கள். 'கேவலம் பெண் பிள்ளைகள்' என்று அலட்சியம் செய்வீர்கள். பெண்களுடன் போர் செய்வது உங்களுக்கு அவமானம். ஆனால் நூறு ஆண் பிள்ளைகளைக் காட்டிலும் ஒரு பெண் பிள்ளை அதிகமான தீங்கு செய்துவிடுவாள். பாம்பின் கால் பாம்பு அறியும். அந்தக் குந்தவையின் வஞ்சனையெல்லாம் உங்களுக்குத் தெரியாது; எனக்குத் தெரியும். தங்களையும் என்னையும் சேர்த்து அவள் அவமானப்படுத்தியதைத் தாங்கள் மறந்திருக்கலாம்; நான் மறக்க முடியாது. நூறு பெண்களுக்கு மத்தியில் என்னைப் பார்த்து 'அந்தக் கிழவனுக்குத்தான் சாகப் போகிற சமயத்தில் பெண் மோகம் பிடித்துப் புத்தி கெட்டுப் போய் விட்டது; — உன் அறிவு எங்கேயடி போயிற்று? அந்தக் கிழவனைப் போய் ஏன் மணந்து கொண்டாய்?' என்று கேட்டாளே, அதை நான் மறக்க முடியுமா? 'தேவலோக மோகினியைப் போல் ஜொலிக்கிறாயே? எந்த ராஜகுமாரனும் உன்னை விரும்பி மாலையிட்டுப் பட்டமகிஷியாக வைத்திருப்பானே? போயும் போயும் அந்தக் கிழ எருமை மாட்டைப் போய்க் கலியாணம் செய்து கொண்டாயே?' என்று அவள் என்னைக் கேட்டதை மறக்க முடியுமா? இந்த உடம்பில் உயிருள்ள வரையில் மறக்க முடியாது!" என்று கூறி நந்தினி விம்மி அழத் தொடங்கினாள். அவளுடைய கண்களில் பொங்கிய கண்ணீர் தாரை தாரையாகக் கன்னங்களின் வழியாகப் பெருகி அவளது மார்பகத்தை நனைத்தது.

## அத்தியாயம் 39

# உலகம் சுழன்றது!

முதிய பிராயத்தில் தாம் கலியாணம் செய்து கொண்டது பற்றிப் பலர் பலவிதமாகப் பேசிக் கொள்கிறார்கள் என்பதைப் பழுவேட்டரையர் அறிந்திருந்தார். அப்படி நிந்தனையாகப் பேசியவர்களில் குந்தவைப் பிராட்டியும் ஒருத்தி என்பது அவர் காதுக்கு எட்டியிருந்தது. ஆனால் குந்தவை என்ன சொன்னாள் என்பதை இதுவரை யாரும் அவரிடம் பச்சையாக எடுத்துச் சொல்லவில்லை. இப்போது நந்தினியின் வாயினால் அதைக் கேட்டதும் அவருடைய உள்ளம் கொல்லர் உலைக் களத்தை ஒத்தது. குப், குப் என்று அனல் கலந்த பெரு மூச்சு வந்தது. நந்தினியின் கண்ணீர் அவருடைய உள்ளத் தீயை மேலும் கொழுந்து விட்டெரியச் செய்த நெய்யாக உதவிற்று.

"என் கண்ணே! அந்தச் சண்டாளப் பாதகி அப்படியா சொன்னாள்? என்னைக் கிழ எருமை மாடு என்றா சொன்னாள்? இருக்கட்டும்; அவளை... ...அவளை ......என்ன செய்கிறேன், பார்! எருமை மாடு அல்லிக் கொடியைக் காலில் வைத்து நசுக்குவதுபோல் நசுக்கி எறிகிறேன், பார்! இன்னும்... அவளை......அவளை......" என்று பழுவேட்டரையர் கோபாவேசத்தினால் பேச முடியாது தத்தளித்தார். அவர் முகம் அடைந்த கோர சொரூபத்தை வர்ணிக்க முடியாது.

நந்தினி அவரைச் சாந்தப்படுத்த முயன்றாள். அவருடைய இரும்புக் கையைத் தன் பூவையொத்த கரத்தினால் பற்றி விரல்களோடு விரல்களை இணைத்துக் கோத்துக் கொண்டாள்.

"நாதா! எனக்கு நேர்ந்த அவமானத்தைத் தாங்கள் பொறுக்க மாட்டீர்கள் என்பது எனக்குத் தெரியும். ஆனால் மத்தகஜத்தின் மண்டையைப் பிளந்து இரத்தத்தைக் குடிக்கும் வலிமையுள்ள சிங்கம் கேவலம் ஒரு பூனையின் மீது பாய முடியாது. குந்தவை ஒரு பெண் பூனை; ஆனால் பெரிய மந்திரக்காரி. மாயமும் மந்திரமும் செய்துதான் எல்லாரையும் அவள் இஷ்டம் போல் ஆட்டி வைத்துக் கொண்டிருக்கிறாள்! இந்தச் சோழ ராஜ்யத்தையே ஆட்டி வைத்துக் கொண்டிருக்கிறாள்! அவளுடைய மந்திரத்தை மாற்று மந்திரத்தால் தான் வெல்லவேண்டும். தங்களுக்கு விருப்பமில்லா விட்டால் சொல்லி விடுங்கள். இன்றைக்கே நான் இந்த மாளிகையை விட்டு வெளியேறுகிறேன்..." என்று கூறி மீண்டும் விம்மினாள்.

பழுவேட்டரையரின் கோப வெறி தணிந்தது; மோக வெறி மிகுந்தது.

"வேண்டாம், வேண்டாம்! ஆயிரம் மந்திரவாதிகளை வேண்டுமானாலும் அழைத்து வைத்துக் கொள். நீ போக வேண்டாம்! என் உயிர் அனையவள் நீ! 'அனையவள்' என்ன? என் உயிரே நீதான்! உயிர் போய்விட்டால் அப்புறம் இந்த உடம்பு என்ன செய்யும்?......இப்போதே என்னை நீ விலக்கி வைத்திருப்பது என்னை உயிரோடு வைத்துக் கொல்கிறது! இத்தனை மந்திரம் தெரிந்து வைத்திருக்கிறாயே? எனக்கு ஒரு மந்திரம் சொல்லித் தரக்கூடாதா?" என்றார்.

"நாதா! தங்கள் கையில் வாளும் வேலும் இருக்கும் போது மந்திரம் எதற்கு? பேதைப் பெண்ணாகிய என்னிடம் விட்டுவிடுங்கள் மாயமந்திரங்






களை! தங்களுக்கு எதற்கு மாயமும் மந்திரமும்?" என்றாள் நந்தினி.

"கண்ணே! நீ உன் பவள வாய் திறந்து 'நாதா!' என்று அழைக்கும் போதே என் உடம்பு சிலிர்க்கிறது. உன் பொன் முகத்தைப் பார்த்தால் என் மதி சுழல்கிறது! என் கையில் வாளும் வேலும் இருப்பது உண்மைதான். அதையெல்லாம் போர்க்களத்தில் பகைவர்களைத் தாக்குவதற்கு உபயோகிப்பேன். ஆனால் அந்த ஆயுதங்களை வைத்துக்கொண்டு இந்தக் கொடி மண்டபத்தில் என்ன செய்வேன்? மன்மதனுடைய பாணங்களுக்கு எதிர்ப் பாணம் என்னிடம் ஒன்றுமில்லையே? உன்னிடம் அல்லவா இருக்கிறது? எனக்கு மந்திரம் எதற்காக என்று கேட்கிறாய்! என் உடலையும் உயிரையும் ஓயாமல் எரித்துக் கொண்டிருக்கிறதே,—அந்தத் தீயைத் தணிப்பதற்காகத் தான்! அதற்கு ஏதாவது மந்திரம் உனக்குத் தெரிந்தால் சொல்லு! இல்லையென்றால், உன் பூ மேனியைத் தொட்டு மகிழும் பாக்கியத்தை எனக்குக் கொடு! எப்படியாவது என் உயிரைக் காப்பாற்று! கண்மணி! உலகம் அறிய சாஸ்திர விதிப்படி நீயும் நானும் மணந்து இரண்டரை ஆண்டுகள் ஆகின்றன! ஆயினும் நாம் உலக வழக்கப்படி இல்வாழ்க்கை நடத்த ஆரம்பிக்கவில்லை. விரதம் என்றும், நோன்பு என்றும் சொல்லி என்னை ஒதுக்கியே வைத்துக் கொண்டிருக்கிறாய். கரம் பிடித்து மணந்து கொண்ட கணவனை வாட்டி வதைக்கிறாய்! அல்லது ஒரு வழியாக எனக்கு உன் கையினால் விஷத்தைக் கொடுத்துக் கொன்று விடு!......"

நந்தினி தன் செவிகளைப் பொத்திக் கொண்டு, "ஐயையோ! இம்மாதிரி கொடிய வார்த்தைகளைச் சொல்லாதீர்கள்! இன்னொரு முறை இப்படிச் சொன்னால், நீங்கள் சொல்லுகிறபடியே செய்து விடுவேன். விஷத்தைக் குடித்துச் செத்துப் போவேன். அப்புறம் தாங்கள் கவலையற்று நிம்மதியாக இருக்கலாம்!" என்றாள்.

"இல்லை, இல்லை; இனி அப்படிச் சொல்லவில்லை. என்னை மன்னித்து விடு! நீ விஷங் குடித்து இறந்தால் எனக்கு மன நிம்மதி உண்டாகுமா? இப்போது அரைப் பைத்தியமாயிருக்கிறேன். அப்போது முழுப் பைத்தியமாகி விடுவேன்!......"

"நாதா! எதற்காகத் தாங்கள் பைத்தியமாக வேண்டும்? என்றைக்கு நாம் கைப்பிடித்து மணந்து கொண்டோமோ, அன்றைக்கே நாம் இரண்டு உடம்பும் ஓர் உயிரும் ஆகிவிட்டோம். உயிரும் உயிரும் கலந்து விட்டன; உள்ளமும் உள்ளமும் சேர்ந்து விட்டன; தங்கள் இதயத்தின் ஒவ்வொரு துடிப்பும் இங்கே என் இதயத்தில் எதிரொலியை உண்டாக்குகிறது. தங்கள் நெஞ்சில் உதிக்கும் ஒவ்வொரு எண்ணமும் இங்கே என் அகக் கண்ணாடியில் பிரதிபலிக்கிறது. தங்கள் புருவம் நெரிந்தால் என் கண் கலங்குகிறது. தங்கள் மீசை துடித்தால் என் குடல் துடிக்கிறது. இப்படி நாம் உயிர்க்குயிரான பிறகு, கேவலம் இந்த உடலைப்பற்றி ஏன் சிந்தனை? மண்ணினால் ஆன உடம்பு இது; ஒரு நாள் எரிந்து சாம்பராகி மண்ணோடு மண் ஆகப் போகிற உடம்பு இது!..."

"நிறுத்து! நிறுத்து! உன் கொடுமையான வார்த்தைகளைக் கேட்டு என் காது கொப்புளிக்கிறது!" என்று பழுவேட்டரையர் அலறினார். மேலும் அவள் பேச இடங்கொடாமல் பேசினார்:—'மண்ணினால் ஆன உடம்பு என்றா சொன்னாய்? பொய்! பொய்! தேன்மணம் கமழும் உன் கனிவாயினால் அத்தகைய பெரும் பொய்யைச் சொல்லாதே! உன் உடம்பை மண்ணினால் செய்ததாகவா சொன்னாய்? ஒருநாளும் இல்லை. உலகில் எத்தனையோ பெண்கள் இருக்கிறார்கள். அவர்களையெல்லாம் பிரம்மதேவன் மண்ணினாலும் செய்திருக்கலாம், கல்லினாலும் செய்திருக்கலாம், சுண்ணாம்பினாலும் செய்திருக்கலாம், கரியையும் சாம்பலையும் கலந்தும் செய்திருக்கலாம். ஆனால் உன்னுடைய திருமேனியைப் பிரம்மா எப்படிச் செய்தான் தெரியுமா? தேவலோகத்து மந்தார மரங்களிலிருந்து உதிர்ந்த மலர்களைச் சேகரித்தான்; தமிழகத்துக்கு வந்து செந்தாமரை மலர்களைப் பறித்துச் சேகரித்தான்; சேகரித்த மலர்களைத் தேவலோகத்தில் தேவாமிர்தம் வைத்திருக்கும் தங்கக் கலசத்தில் போட்டான். அமுதமும் மலர்களும் ஊறிக் கலந்து ஓர் குழம்பான பிறகு எடுத்தான். அந்தக் குழம்பில் வெண்ணிலாக் கிரணங்களை ஊட்டினான். பண்டைத் தமிழகத்துப் பாணர்களை அழைத்து வந்து யாழ் வாசிக்கச் சொன்னான். அந்த யாழின் இசையையும் கலந்தான். அப்படி ஏற்பட்ட அற்புதமான கலவையினால் உன் திருமேனியைப் படைத்தான் பிரம்மதேவன்......"

"நாதா! ஏதோ பிரம்மாவுக்குப் பக்கத்தில் இருந்து பார்த்தவரைப் போல் பேசுகிறீர்களே! இந்த வர்ணனைகளுக்கெல்லாம் நான் ஒருத்தி தானா அகப்பட்டேன்? தங்களுடைய அந்தப்புரத்தில் எவ்வளவோ பெண்ணரசிகள் இருக்கிறார்கள். இராஜ குலங்களில் பிறந்தவர்கள். எத்தனையோ நீண்ட காலமாக அவர்களுடன் இல்லறம் நடத்தியிருக்கிறீர்கள். என்னைத் தாங்கள் பார்த்து இரண்டரை ஆண்டுதான் ஆகிறது!......" என்று நந்தினி சொல்வதற்குள், பழுவேட்டரையர் குறுக்கிட்டார். அவருடைய உள்ளத்தில் பொங்கிக்கொண்டிருந்த உணர்ச்சி வெள்ளத்தை வார்த்தைகளின் மூலமாகவாவது வெளிப்படுத்திவிட விரும்பினார் போலும். அவரைப்பற்றி எரித்த தாபத் தீயைச் சொல் மாரியினால் நனைத்து அணைக்க முயன்றார் போலும்.

"நந்தினி! என் அந்தப்புரத்து மாதர்களைப் பற்றிச் சொன்னாய். பழமையான பழுவூர் மன்னர் குலம் நீடித்து வளர வேண்டும் என்பதற்காகவே அவர்களை நான் மணந்தேன். அவர்களில் சிலர் மலடிகளாகித் தொலைந்தார்கள். வேறு சிலர் பெண்களையே பெற்றளித்தார்கள். 'கடவுள் அருள் அவ்வளவுதான்' என்று மனநிம்மதியடைந்தேன். பெண்களின் நினைவையே வெகு காலம் விட்டொழித்திருந்தேன். இராஜாங்க காரியங்களே என் கவனம் முழுவதையும் கவர்ந்திருந்தன. சோழ ராஜ்யத்தின் மேன்மையைத் தவிர வேறு எந்த நினைவுக்கும் இந்த நெஞ்சில் இடமிருக்கவில்லை. இப்படி இருக்கும்போது தான்



பாண்டியர்களோடு இறுதிப் பெரும் யுத்தம் வந்தது. வாலிபப் பிராயத்துத் தளபதிகள் பலர் இருந்தபோதிலும் என்னால் பின் தங்கி இருக்க முடியவில்லை. நான் போர்க்களம் சென்றிராவிட்டால், அத்தகைய மாபெரும் வெற்றி கிடைத்தும் இராது. பாண்டியர் படையை அடியோடு நாசம் செய்து மதுரையில் வெற்றிக் கொடி நாட்டிய பிறகு கொங்கு நாடு சென்றேன். அங்கிருந்து அகண்ட காவேரிக் கரையோடு திரும்பி வந்து கொண்டிருந்தேன். வழியில் காடு அடர்ந்த ஓர் இடத்தில் உன்னைக் கண்டேன். முதலில் நீ அங்கு நிற்கிறாய் என்பதை என்னால் நம்பவே முடியவில்லை. கண்ணை மூடி மூடித் திறந்து பார்த்தேன். அப்போதும் நீ நின்றாய். 'நீ வன தேவதையாக இருக்க வேண்டும்; அருகில் சென்றதும் மறைந்து விடுவாய்!' என்று எண்ணிக் கொண்டு நெருங்கினேன். அப்போதும் நீ மறைந்து விடவில்லை. 'புராணக் கதைகளிலே சொல்லியிருப்பது போல், சொர்க்கலோகத்திலிருந்து சாபம் பெற்றுப் பூமிக்கு வந்த தேவ கன்னிகை அல்லது கந்தர்வப் பெண்ணாயிருக்கவேண்டும்; மனித பாஷை உனக்குத் தெரிந்திராது!' என்று எண்ணிக் கொண்டு, 'பெண்ணே! நீ யார்?' என்று கேட்டேன். நீ நல்ல தமிழில் மறுமொழி கூறினாய். 'நான் அநாதைப் பெண்; உங்களிடம் அடைக்கலம் புகுந்தேன்; என்னைக் காப்பாற்றுங்கள்' என்றாய். உன்னைப் பல்லக்கில் ஏற்றி அழைத்துக் கொண்டு வந்தபோது என் மனம் எண்ணாததெல்லாம் எண்ணியது. உன்னை எங்கேயோ, எப்போதோ, முன்னம் பார்த்திருப்பது போலத் தோன்றியது. ஆனால் நினைத்து நினைத்துப் பார்த்தும் எங்கே என்று தெரியவில்லை. சட்டென்று என் மனத்தை மூடியிருந்த மாயத்திரை விலகியது; உண்மை உதயமாயிற்று. உன்னை இந்த ஜன்மத்தில் நான் முன்னால் பார்த்ததில்லை, ஆனால் முந்தைய பல பிறவிகளில் பார்த்திருக்கிறேன் என்பது தெரிந்தது. அந்தப் பூர்வ ஜன்மத்து நினைவுகள் எல்லாம் மோதிக் கொண்டு வந்தன. நீ அகலிகையாக இந்த உலகில் பிறந்திருந்தாய்; அப்போது நான் தேவேந்திரனாக இருந்தேன். சொர்க்கலோக ஆட்சியைத் துறந்து ரிஷி சாபத்துக்கும் துணிந்து உன்னைத் தேடிக்கொண்டு வந்தேன். பிறகு நான் சந்தனு மகாராஜனாகப் பிறந்திருந்தேன். கங்கைக் கரையோடு வேட்டையாடச் செல்கையில் உன்னைக் கண்டேன்; பூலோகப் பெண்ணைப்போல் உருக் கொண்டிருந்த கங்கையாகிய உன்னைக் காதலித்தேன். பிறகு ஒரு காலத்தில் காவேரிப்பூம்பட்டினத்தில் நான் கோவலனாய்ப் பிறந்திருந்தேன். நீ கண்ணகியாக அவதரித்திருந்தாய். என் அறிவை மறைத்த மாயையினால் உன்னைச் சிலகாலம் மறந்திருந்தேன். பிறகு மாயைத்திரை விலகிற்று. உன் அருமையை அறிந்தேன். மதுரை நகருக்கு அழைத்துச் சென்றேன். வழியில் உன்னை ஆயர்குடியில் விட்டுவிட்டுச் சிலம்பு விற்கச் சென்றேன். வஞ்சத்தினால் உயிரை இழந்தேன். அதற்குப் பழிக்குப் பழியாக இந்தப் பிறவியில் மதுரைப் பாண்டியன் குலத்தை நாசம் செய்துவிட்டுத் திரும்பி வரும்போது உன்னைக் கண்டேன். பல நூறு ஆண்டுகளுக்கு முன்பு பிரிந்த கண்ணகி நீதான் என்பதை உணர்ந்தேன்!......"

இப்படிப் பழுவேட்டரையர் முற்பிறவிக் கதைகளைச் சொல்லிக்கொண்டு வந்தபோது நந்தினி அவர் முகத்தைப் பார்க்காமல் வேறு திசையை நோக்கிக் கொண்டிருந்தாள். அதனால் அவள் முகத்தில் அப்போது தோன்றிய பாவ வேறுபாடுகளைப் பழுவேட்டரையர் கவனிக்கவில்லை. கவனித்திருந்தால், அவர் தொடர்ந்து பேசியிருப்பாரா என்பது சந்தேகந்தான்.

மூச்சு விடுவதற்காக அவர் சற்று நிறுத்தியபோது, நந்தினி அவரைத் திரும்பிப் பார்த்து, "நாதா! தாங்கள் கூறிய உதாரணங்கள் அவ்வளவு பொருத்தமாயில்லை. எல்லாம் கொஞ்சம் அபசகுனமாகவே இருக்கின்றன. வேண்டுமென்றால், தங்களை மன்மதன் என்றும் என்னை ரதி என்றும் சொல்லுங்கள்!" என்று முன்போல் முக மலர்ந்து புன்னகை செய்தாள்.

பழுவேட்டரையரின் முகமும் அப்போது மகிழ்ச்சியினாலும் பெருமை

யினும் மலர்ந்து விளங்கியது. எவ்வளவு அவலட்சணமான மனிதனாயினும், தான் காதலிக்க பெண்ணினால் 'மன்மதன்' என்று அழைக்கப்பட்டால் குதூகலப்படாதவன் யார்! என்றாலும், தற்பெருமையை விரும்பாதவர்போல் பேசினார்.

"கண்மணி! உன்னை ரதி என்பது மிகவும் பொருத்தமானதுதான். ஆனால் என்னை 'மன்மதன்' என்று சொல்வது பொருந்துமா! உன் அன்பு மிகுதியினால் சொல்கிறாய்!" என்றார்.

"நாதா! என் கண்களுக்குத் தாங்கள்தான் மன்மதன். ஆண்பிள்ளைகளுக்கு அழகு வீரம். தங்களைப் போன்ற வீராதி வீரர் இந்தத் தென்னாட்டில் யாரும் இல்லை என்பதை உலகமே சொல்லும். அடுத்தபடியாக, ஆண்மை படைத்தவர்களுக்கு அழகு தருவது அபலைகளிடம் இரக்கம். அந்த இரக்கம் தங்களிடம் இருப்பதற்கு நானே அத்தாட்சி. இன்ன ஊர், இன்ன குலம் என்று தெரியாத இந்த ஏழை அநாதைப் பெண்ணைத் தாங்கள் அழைத்துவந்து அடைக்கலம் அளித்தீர்கள். இணையில்லாத அன்பையும் ஆதரவையும் என்பேரில் சொரிகிறீர்கள். அப்படிப்பட்ட தங்களை நான் வெகுகாலம் காத்திருக்கும்படி செய்ய மாட்டேன். என்னுடைய விரதமும் நோன்பும் முடியும் காலம் நெருங்கி விட்டது......" என்றாள்.

"கண்மணி! என்ன விரதம், என்ன நோன்பு என்பதை மட்டும் தெளிவாகச் சொல்லிவிடு! எவ்வளவு சீக்கிரம் முடித்துத் தரலாமோ அவ்வளவு சீக்கிரத்தில் முடித்துத் தருவேன்!" என்றார் பழுவூர் அரசர்.

"தன்னைக் காட்டிலும் மன்மதன் வேறு இல்லை என்று எண்ணியிருக்கும் இந்தச் சுந்தர சோழருடைய சந்ததிகள் தஞ்சைச் சிம்மாசனத்தில் ஏறக்கூடாது. தற்பெருமை கொண்ட அந்தக் குந்தவையின் கர்வத்தை ஒடுக்க வேண்டும்......"

"நந்தினி! அந்த இரண்டு காரியங்களும் நிறைவேறி விட்டதாகவே நீ வைத்துக் கொள்ளலாம். ஆதித்தனுக்கும் அருள்மொழிவர்மனுக்கும் பட்டம் கிடையாது. மதுராந்தகனுக்கே பட்டம் கட்டவேண்டும் என்று இந்த ராஜ்யத்தின் தலைவர்கள் எல்லாரும் சம்மதித்து விட்டார்கள்......"

"எல்லாரும் சம்மதித்து விட்டார்களா? உண்மைதானா?" என்று நந்தினி அழுத்தமாகக் கேட்டாள்.

"இரண்டு மூன்று பேரைத் தவிர மற்றவர்கள் எல்லாரும் சம்மதித்து விட்டார்கள். கொடும்பாளூராரும், மலையமானும், பார்த்திபேந்திரனும் நம்முடன் என்றும் இணங்க மாட்டார்கள். அவர்களைப்பற்றிக் கவலையில்லை......"

"ஆயினும், காரியம் முடியும் வரையில் ஜாக்கிரதையாக இருக்க வேண்டியதுதானே?"

"அதற்குச் சந்தேகம் இல்லை. எல்லா ஜாக்கிரதையும் நான் செய்துகொண்டுதான் வருகிறேன். மற்றவர்களின் முட்டாள்தனத்தினால் பிசகு நேர்ந்தால்தான் நேர்ந்தது. இன்றைக்குக் கூட அத்தகைய பிசகு ஒன்று நேர்ந்திருக்கிறது. காஞ்சியிலிருந்து வந்த ஒரு வாலிபன் காலாந்தகனை ஏமாற்றி விட்டுச் சக்கரவர்த்தியைச் சந்தித்து ஓலை கொடுத்திருக்கிறான்......"

"ஆகா! தங்கள் தம்பியைப் பற்றித் தாங்கள் ஓயாமல் புகழ்ந்து கொண்டிருக்கிறீர்கள். அவருக்குச் சாமர்த்தியம் போதாது என்று நான் சொல்லவில்லையா?"

"இந்த விஷயத்தில் அசட்டுத்தனமாகத்தான் போய்விட்டான்! ஏதோ நம் அரண்மனை முத்திரை மோதிரத்தை அந்த வாலிபன் காட்டியதாகச் சொல்கிறான்!......"

"ஏமாந்து போனவர்கள் இப்படித்தான் ஏதாவது காரணம் சொல்வார்கள்! ஏமாற்றிய அந்த வாலிபனைப் பிடிக்க முயற்சி ஏதும் செய்யவில்லையா?......"

"முயற்சி செய்யாமல் என்ன? கோட்டைக்கு உள்ளேயும் வெளியிலேயும் வேட்டை ஆரம்பமாகி விட்டது! எப்படியும் பிடித்து விடுவார்கள். இதனாலெல்லாம் நம்முடைய காரியத்துக்கு ஒன்றும் பங்கம் வந்து விடாது. சக்கரவர்த்தி காலமானதும் மதுராந்தகன் சிம்மாதனம் ஏறுவது நிச்சயம்..."

"நாதா! என்னுடைய விரதம் என்ன வென்பதைத் தங்களுக்குத் தெரியப்படுத்தும் காலம் இப்போது நெருங்கி வந்து விட்டது......"

"கண்ணே! அதைச் சொல்லும்படிதான் நானும் கேட்கிறேன்......"

"மதுராந்தகன்—அந்த அசட்டுப் பிள்ளை—பெண் என்றால் பல்லை இளிப்பவன்—அவன் பட்டத்துக்கு வருவதினால் என்னுடைய விரதம் நிறைவேறிவிடாது......"

"வேறு எதனால் நிறைவேறும்? உன் விருப்பத்தைச் சொல்லு! நிறைவேற்றி வைக்க நான் இருக்கிறேன்..."

"அரசே! என் சிறு பிராயத்தில் ஒரு பிரபல ஜோசியன் என் ஜாதகத்தைப் பார்த்தான். பதினெட்டுப் பிராயம் வரையில் நான் பற்பல இன்னல்களுக்கு உள்ளாவேன் என்று சொன்னான்......"

"இன்னும் என்ன சொன்னான்?"

"பதினெட்டுப் பிராயத்துக்குப் பிறகு தசை மாறும் என்றான். இணையில்லாத உன்னத பதவியை அடைவேன் என்று சொன்னான்......"

"அவன் சொன்னது உண்மைதான்! அந்த ஜோசியன் யார் என்று சொல்லு! அவனுக்குக் கனகாபிஷேகம் செய்து வைக்கிறேன்."

"நாதா!"

"கண்ணே!"

"இன்னும் அந்த ஜோசியன் கூறியது ஒன்று இருக்கிறது. அதைச் சொல்லட்டுமா?"

"கட்டாயம் சொல்லு! சொல்லியே தீரவேண்டும்!"

"என்னைக் கைப்பிடித்து மணந்து கொள்ளும் கணவர் மணிமகுடம் தரித்து ஒரு மகா சாம்ராஜ்யத்தின் சிம்மாசனத்தில் ஐம்பத்தாறு தேசத்து ராஜாக்களும் வந்து அடிபணிந்து ஏத்தும் சக்கரவர்த்தியாக வீற்றிருப்பார் என்று அந்த ஜோசியன் சொன்னான். அதை நிறைவேற்றுவீர்களா?"

பழுவேட்டரையரின் செவியில் இவ்வார்த்தைகள் விழுந்ததும், அவருக்கு முன்னாலிருந்த நந்தினியும் அவள் வீற்றிருந்த மஞ்சமும் சுழன்றன. லதா மண்டபம் சுழன்றது. அந்த மண்டபத்தின் தூண்கள் சுழன்றன. எதிரே இருந்த இருளடர்ந்த தோப்புச் சுழன்றது. நிலாக் கதிரில் ஒளிர்ந்த மர உச்சிகள் சுழன்றன. வானத்து நட்சத்திரங்கள் சுழன்றன. இருபுறத்து மாளிகைகளும் சுழன்றன. உலகமே சுழன்றது! (தொடரும்)



பம்பாய் டைம்ஸ் ஆப் இந்தியாவின் உதவி புரொடக்ஷன் மானேஜர் ஸ்ரீ G. S. சங்கரநாத் அவர்களது குமாரத்தி சௌபாக்யவதி ராஜலக்ஷ்மியின் விவாகத்தின்போது எடுக்கப் பட்ட படம். விவாகத்துக்கு டைம்ஸ் ஆப் இந்தியாவின் ஜெனரல் மானேஜர் ஸ்ரீ J. C. ஜெயின், புரொடக்ஷன் மானேஜர் ஸ்ரீ K. C. மேனன், புரொபஸர் S. S. L. சோர்டியா மற்றும் அநேக தென்னிந்தியப் பிரமுகர்களும் பத்திரிகையாளர்களும் விஜயம் செய்தனர்.



நீங்கள் உங்கள் பற்களை
இன்று மக்ளீன் செய்தீர்களா?
"நான் எப்போதும்
'மக்ளீன்' தான் உப
யோகிக்கிறேன்;
ஏனெனில் வாய்க்கு
ஒரு இனிப்பும் கவர்ச்
சியும் அது தருகிறது.
என் பற்களை அது
நன்கு பாதுகாக்கிறது
என்று பார்த்தாலே
தெரிந்து கொள்
ளலாம்"
மூச்சின் நாற்றத்தை போக்குகிறது
வாயைச் சுத்திகரித்து உங்கள் ஈறுகளைப் பாதுகாக்கிறது
மேலே உள்ள கறைகளை அகற்றி பற்களுக்கு வெண்மை தருகிறது
எல்லாம் செய்யக்கூடிய ஒரே பற்பசை மக்ளீன்ஸ். பற்களை பளபளவென்று வெண்மையாயிருக்கச் செய்து, உமிழ் நீர் அதிகரிப்பால் பல் சொத்தை பிடிப்பதைத் தடுத்து, மூச்சை சுகந்த மணம் கமழுவதாய் செய்து, உபயோகிப்பதற்கு ஆனந்தம் அளிக்கிறது இது.
பிரத்யேகமான, பிறர் பின்பற்ற முடியாத தயாரிப்பு மக்ளீன்ஸ் பெராக்ஸைட் பற்பசை. இதன் பரிபூரண சுத்தத்திற்கு உத்தரவாதம்.
இன்றே மக்ளீன்ஸ் வாங்குங்கள்
MACLEANS
PEROXIDE
TOOTH PASTE
MTX 3TM

# சாருவின்  அதிர்ஷ்டம்

வி. எஸ். ஆர்.

"இரவு ஏழு மணியிலிருந்து பதினொன்று அல்லது பன்னிரண்டு மணி வரை கணக்கு எழுத, காஷியர் வேலையில் அனுபவமுள்ள வாலிபர் தேவை. பிரம்மசாரிகளாக இருப்பவர்கள் மட்டுமே விண்ணப்பிக்கவும்" என்ற விளம்பரத்தைப் பார்த்ததும் ராஜன் பத்திரிகையை அப்படியே எடுத்துக் கொண்டு போய்த் தன் மனைவி சாருவிடம் அவசரம் அவசரமாகப் படித்துக் காண்பித்தான்.

"இதற்கும் ஒரு அப்ளிகேஷனைப் போட்டு வையுங்கள். நீங்கள் வாலிபர் தான். ராமா பாங்கில் ஆறு வருஷம் காஷியர் வேலை பார்த்து ஆள் எடுப்பில் வேலை போனவர்தான். ஆனால் இந்த வேலைக்குக் கல்யாணமாகாதவர் வேண்டுமென்று போட்டிருக்கிறதே. இந்த நிபந்தனை ஏன்? ஏதாவது பெண் கொடுக்கப் போகிறார்களா, என்ன?" என்றாள் சாரு.

"இல்லை சாரு! ஒரு கிருஹஸ்தனைப் போய்த் தினம் இரவு பன்னிரண்டு மணி வரை கண் விழிக்கச் சொன்னால் நன்றாயிருக்காதல்லவா? ஆகையால்தான் இந்த நிபந்தனை போட்டிருக்கிறார்கள் என்று தோன்றுகிறது!" என்றான் ராஜன்.

"இதற்கு என்ன செய்வது?"

"எனக்கு ஒரு யுக்தி தோன்றுகிறது, சாரு! இனி வேலையில்லாமல் ஒரு நிமிஷம் கூட என்னால் இருக்க முடியாது; நான் பிரம்மசாரி தான் என்று விண்ணப்பத்தில் எழுதிவிடப் போகிறேன்; என் நண்பன் ராஜுவின் விலாசத்துக்குப் பதில் வரும்படி செய்து விடுகிறேன்!"

சாரு சிரித்துவிட்டு, "நீங்கள் குழந்தை குட்டிகள் உள்ள குடித்தனக்காரர்தான் என்று அந்தக் கம்பெனிக்காரருக்குத் தெரிந்து விட்டால்?" என்று கேட்டாள்.

"எப்படித் தெரியும்? விளம்பரம் போட்டிருப்பவர் விலாசமோ மயிலாப்பூரில்; நாம் இருப்பதோ தண்டையார்ப்பேட்டையில்! இவ்வளவு தூரம் வந்து நம் ரகசியத்தை யாரும் கண்டு பிடிக்க முடியாது. ராமா பாங்கில் நான் வேலை செய்து வந்தபோது என் சகாக்களில் யார் யார் கிருஹஸ்தர்கள், யார் யார் பிரம்மசாரிகள் என்பது எனக்கு இன்னமும் தெரியாது. நமக்கு வேண்டியது வேலை. இந்தப் பொய் சொல்வதனால் யாருக்கும் எந்தவிதமான தீமையும் உண்டாகப் போவதில்லையே!" என்றான் ராஜன்.

முடிவில் ராஜன், தான் பிரம்மசாரி என்றும், தனக்கு இருக்கும் மற்ற யோக்கியதைகள் என்னவென்பதையும் எழுதி விளம்பரத்திலுள்ள விலாசத்துக்கு அப்ளிகேஷனை அனுப்பினான். ராஜன் சென்ற பத்து மாதங்களாக வேலையின்றிப் பட்ட கஷ்டம் கொஞ்ச நஞ்சமல்ல. கையிலுள்ள நகைகளைக் கூட விற்று மேலே என்ன செய்வதென்று தெரியாமல் கலங்கி நின்ற சமயம். அவனுக்கு ஒரு பையனும் பெண்ணுமாக இரு குழந்தைகள் இருந்தன.

மனு எழுதிப் போட்ட நாலைந்து தினங்களுக்கெல்லாம் விளம்பரம் செய்திருந்தவரிடமிருந்து ராஜனுக்குப் பதில் வந்துவிட்டது. தம்மை உடனே வந்து பேட்டி காணும்படி மருதாசலம் அவனை அழைத்திருந்தார். தன் இஷ்டதெய்வங்களையெல்லாம் பிரார்த்தித்துக்கொண்டு ராஜன் அன்றே மருதாசலத்தைப் பேட்டி காணச் சென்றான். தலை தீபாவளிக்குத் தனக்கு எடுத்துக் கொடுத்திருந்த ஸில்க் ஜிப்பாவை எடுத்துப்போட்டுக் கொண்டான். ராஜனுக்கு இருபத்தெட்டு வயது ஆகியிருந்தும், அவன் நடை உடை பாவனை, தோற்றம், எல்லாம் கல்யாணமாகாத பிரம்மசாரியைப்போலவே இருந்தன. ஆகவே மருதாசலம் அவனுடன் ஐந்து நிமிஷங்கள் பேசிக் கொண்டிருந்த பிறகு, "இவன்தான் சரியான ஆசாமி!" என்று உற்சாகத்துடன் வேலைக்கு அவனைத் தேர்ந்தெடுத்ததில் வியப்பில்லையல்லவா?

★

மருதாசலம் சென்னையில் பல இடங்களில் மளிகைக் கடைகள் வைத்திருந்தார். எல்லாப் பிராஞ்சுகளிலிருந்தும் வந்த ரொக்கத்தை எண்ணி வைப்பதும் கணக்கு எழுதுவதும் ராஜனின் தினசரி வேலை. பிரதிதினமும் வேலை முடிவதற்கு இரவு பன்னிரண்டு மணி, ஒரு மணி ஆகிவிடும். இதற்குப் பிறகு அவனுக்குத் தண்டையார்ப்பேட்டை செல்ல முடியாதாகையால் எஜமான் வீட்டு மாடி வராந்தாவில் படுத்துக்கொண்டிருந்து விட்டு, காலையில் முதல் பஸ்ஸில் வீட்டுக்குத் திரும்புவான். கணவனுக்கு மாதம் நூற்றைம்பது ரூபாயில் காஷியர் வேலை கிடைத்த சந்தோஷத்தைச் சாரு சில நாட்களில் மறந்து போனாள். கணவனைப் பிரிந்து குழந்தைகளுடன் தன்னந் தனியே இரவில் இருக்க

பிகர்த்திருப்பதை எண்ணி வேதனை யடைந்தான். இரவு நேரங்களில் தூக்கம் வராமல் 'கொட்டுக் கொட்' டென்று கண் விழித்திருப்பான். பக்கத்து வீட்டுப் பாட்டி அம்மாள் அவனுக்குத் துணையாக வீட்டில் படுத்துக் கொண்ட பிறகுகூட, அவன் நிம்மதியாகத் தூங்குவதில்லை. 'இதென்ன பிழைப்பு! இதென்ன வாழ்க்கை!' என்று அவன் மனம் அவதியுற்றது.

ராஜனும் சில நாட்களுக்கெல்லாம் தன் நிலையை நினைத்து வருந்தத் தொடங்கினான். ஒவ்வொரு இரவும் அவன் மனம் வேலையில் செல்ல மறுத்தது. "இந்நேரம் சாருவும் குழந்தைகளும் என்ன செய்கிறார்களோ?" என்று கவலைப்படத் தொடங்கினான்.

நாளாக ஆக ராஜன் வேலையில் மருதாசலத்துக்கு நன்மதிப்பும் அவனிடம் நம்பிக்கையும் ஏற்பட ஆரம்பித்தன. 'இவன் யோக்கியமான மனிதன்தான்' என்று முடிவு செய்தார் அவர். ராஜன் வேலைக்கு வந்த இரண்டு மாதங்களுக்கெல்லாம் சம்பளத்தில் 50 ரூபாய் உயர்த்தினார். "ராஜன்! உன் வீட்டில் யார் யார் இருக்கிறார்கள்?" என்று ஒருநாள் அவனை மருதாசலம் அன்புடன் விசாரித்தார்.

"வீட்டில் இரண்டு......" என்று குழந்தைகளைப் பற்றிச் சொல்ல வந்த ராஜன் பல்லைக் கடித்துக் கொண்டு, "நானும் என் தாயாருமாக இரண்டு பேர்கள்தான் இருக்கிறோம்" என்று சமாளித்துக் கொண்டான்.

"இரவில் உன் தாயார் தனியாக இருப்பது மிகவும் கஷ்டமல்லவா? நீயும் உன் தாயாரும் நம் வீட்டிலேயே தங்கிவிடலாமே. என்ன சொல்கிறாய், தம்பி?" என்று ஒரு வெடிகுண்டைத் தூக்கிப் போட்டார் மருதாசலம்.

"உங்கள் அன்புக்கு ரொம்ப வந்தனம். ஆனால் என் தாயார் பழைய காலத்து மனுஷி. இங்கே வந்து இருப்பதென்றால் ஒப்புக் கொள்கிறார்களோ என்னவோ?" என்றான் ராஜன்.

"பெண் பிள்ளைகள் சங்கோசம் உள்ளவர்கள். இந்தமாதிரி சட்டென்று வீட்டை விட்டுப் புது இடம் வருவதற்கு அவர்கள் சம்மதப்பட மாட்டார்கள். ஆனால், நானே உன் தாயாரை நேரில் பார்த்துப் பேசிக் கொஞ்சம் கொஞ்சமாக இணங்கச் செய்து விடலாமென்று பார்க்கிறேன்" என்றார் மருதாசலம்.

தூக்கி வாரிப்போட்டது ராஜனுக்கு. மருதாசலம் தன் வீட்டுக்கு வந்தால் தன் குட்டு வெளிப்பட்டு விடுமல்லவா?

"இரண்டு தினங்களில் நான் உன் வீட்டுக்கு வந்து உன் தாயாரைப் பார்க்க வேண்டும்" என்று கூறினார் எஜமானர்.

இந்த வில்லங்கத்துக்கு என்ன செய்வதென்று ராஜன் கலங்கி நின்றபோதுதான் மறுநாள் பம்பாயிலிருந்து மருதாசலத்துக்குத் தந்தி ஒன்று வந்திருந்தது.

அன்று மாலை ராஜன் வேலைக்கு வந்ததும் மருதாசலம் அவனைப் பார்த்து, "தம்பி! சொந்த விஷயமாக பம்பாயிலுள்ள என் தம்பியைப் பார்க்கப் போகிறேன். வரும்போது என் மகன் பானுமதியை அழைத்துக் கொண்டு வரப்போகிறேன். அவன் பம்பாய்க்குப் போனதிலிருந்து, இந்த நாலுமாத காலமாக, பானுவைப் பார்க்காமல் எனக்கு இருப்பே கொள்ளவில்லை. நான் வரும் வரை நீ எல்லாவற்றையும் சரிவரக் கவனித்துக் கொள்வாய் என்ற நம்பிக்கை இருக்கிறது" என்று கூறிவிட்டு விமானத்தில் பம்பாய்க்குப் புறப்பட்டுச் சென்றார்.



பானுமதியைப் பற்றி முதன் முதலாகக் கேள்விப்பட்டதும் அவன் மனதில் வேதனை தலை காட்டியது. மருதாசலத்துக்குப் பெண்கள் இல்லை என்று இதுவரை அசட்டுத்தனமாக நினைத்துச் சந்தோஷப்பட்டு வந்தான் ராஜன். இப்பொழுது என்னென்னவோ காரணம் தெரியாத பயங்களும் சந்தேகங்களும் அவனைப் பற்றிக் கொண்டன.

மறுவாரம் மருதாசலம், தம் மகள் பானுவுடன் சென்னைக்குத் திரும்பினார். பானுவுக்கு வயது இருபது இருக்கும். அதிக அழகில்லைதான் என்றாலும் அவள் நவநாகரிக தோரணையும் முகத்திலுள்ள குறுகுறுப்பும் யாரையும் கவராமல் இராது. பரபர வென்ற அவள் பார்வையிலிருந்தும் வெடுக்கென்ற பேச்சிலிருந்தும் அவள் நல்ல புத்திசாலி என்று சொல்லிவிடலாம்.

ராஜன் முன் எச்சரிக்கையாகவே நடந்து கொண்டான். பிரதி தினமும் அவன் வேலையை முடித்துக் கொண்டு கிளம்பும் வரை அவன் தலையை நிமிர்த்திக் கூடப் பார்ப்பதில்லை. ஓரிரண்டு தடவை பானு குறுக்கும் நெடுக்கும் போனபோது அவன் வேண்டுமென்றே அவளைப் பார்க்கவில்லை. இதனால் ஏற்படக்கூடிய வில்லங்கங்களுக்கு அவன் தயாராக இல்லை.

பானு வந்த இரண்டு தினங்களுக்கெல்லாம் மருதாசலம், ராஜனைப் பார்த்து, "தம்பி! இரும்புப் பெட்டிச் சாவியைப் பானுவிடம் கொடுத்து வைத்தேன். அதைத் தயவுசெய்து வாங்கி வருகிறாயா?" என்று கேட்டார். ராஜனும் எழுந்து பானுவின் அறைக்குச் சென்றான்.

அப்பொழுது பானு, அவன் வாசற்படியில் நிற்பதைக் கவனியாமல் ஏதோ அவசரமாக எழுதிக் கொண்டிருந்தாள். "அப்பா சாவிக் கொத்தை வாங்கிவரச் சொன்னார்" என்று ராஜன் கூறியதும், பானு நடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தாள். "யார் நீங்கள்?" என்று சட்டென்று கேட்டாள்.

"என்னைத் தெரியாதா உங்களுக்கு? நான் இங்கே காஷியர் வேலை பார்க்கும் ராஜன்தான்" என்றான் ராஜன்.

"நீங்கள் காஷியர்தானா அல்லது பியூனா என்ற சந்தேகம் ஏற்பட்டது."

"ஏன் அந்தச் சந்தேகம் உங்களுக்கு?" என்று கேட்டுத் தடுமாறினான் ராஜன்.

"சாவியை வாங்கிவருவது போன்ற எடுபிடி வேலைகளைப் பியூன்கள்தான் செய்கிற வழக்கம். அப்பா சாவி வாங்கி வரும்படி உங்களிடம் சொன்னால், 'ஒரு பியூனை அனுப்புங்கள்' என்று நீங்கள் ஏன் சொல்லக்கூடாது? அவ்வளவு உங்களுக்குத் தைரியம் இல்லையா? இனிமேல் இப்படியெல்லாம் வராதீர்கள்" என்று சொல்லி மேஜையிலிருந்த மணியை அடித்தாள். மறு கணம் அங்குவந்த வேலைக்காரனிடம் சாவிக் கொத்தைக் கொடுத்து, "இதைக் கொண்டு போய் அப்பாவிடம் கொடு!" என்றாள் பானுமதி.

திகைத்துப்போன ராஜன் திரும்பினான். பானுவின் பேச்சு அவன் கன்னத்தில் அறைந்தாற் போலிருந்தது. 'இந்தப் பெண்ணுக்கு என்ன தைரியம்! என்ன பொல்லாத்தனம்!' என்று அதிசயித்தான்.

மறுநாள் மருதாசலம் ராஜனைப் பார்த்து, "உங்களுக்கு ஒரு சிறிய வெகுமதி அளிக்கப் போகிறேன்" என்றார்.

"வெகுமதியா? எனக்கா?" என்று திடுக்கிட்டுக் கேட்டான் ராஜன்.

"ஆமாம், உனக்கு ஒரு டஜன் ஸில்க் ஜிப்பா தைத்துவைத்திருக்கிறேன். இங்கே வேலைக்கு வரும்போது தினமும் 'ஜம்'மென்று அதைப் போட்டுக் கொண்டு வரவேண்டும், என்ன?" என்று கேட்டுப் பார்ஸலை அவனிடம் கொடுத்தார்.

"எனக்கு இதெல்லாம் எதற்கு, ஸார்? நானோ ......" என்று ராஜன் மறுதளிப்பதற்குள் "உன் வயதுப் பிள்ளை பட்டுச் சொக்காய் போட்டுக் கொள்ளாமல் வேறு யாரப்பா போட்டுக் கொள்ளவேண்டும்?" என்று கூறிப் பார்சலை அவன் கையில் திணித்தார் மருதாசலம்.

*

அவன் வீட்டுக்குப் போனதும் பட்டுச் சட்டைப் பார்சலைப் பார்த்த சாருவின் திகைப்பு எல்லை கடந்து விட்டது. "குழந்தைகளுக்கு இரண்டு சொக்காய்கள் தைக்க வேண்டுமென்று இரண்டு மாதமாய்ச் சொல்லிக் கொண்டிருக்கிறேன். அதற்கு ஒரு வழியைக் காணோம். உங்களுக்கு மட்டும் பட்டுச் சட்டையில் ஒரு டஜன் தைத்துக்கொண்டிருக்கிறீர்களே? நன்றாயிருக்கிறதா?" என்று சண்டைக்கு வந்துவிட்டாள். "அவை மருதாசலத்தின் வெகுமதி" என்று ராஜன் நிஜத்தைச் சொல்லியும் அவள் நம்பவில்லை.

சற்றும் எதிர்பாராத மற்றொரு சம்பவம் அன்று மாலை நிகழ்ந்தது. ராஜன் மருதாசலத்தின் வீட்டுக்கு வெகு தூரத்தில் வரும்போதே எஜமான் வாசற்படியில் நின்று கொண்டிருப்பதைக் கண்டு நடையைத் துரிதப்படுத்தினான். அவன் அருகில் வந்ததும் மருதாசலம் "தம்பி! உன்னைத்தான் எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறேன். நாங்கள் இன்று புதிதாக வந்திருக்கும் சினிமாப் படம் ஒன்றைப் பார்க்கப் போகிறோம்: நீயும் வா! இன்று ஒரு நாள் இந்தக் கணக்கையும் இரும்புப் பெட்டியையும் மறந்து விடு!" என்று ராஜன் பதில் சொல்வதற்கு முன் அவன்

கையைப் பிடித்துக் கர கரவென்று இழுத்துக்கொண்டு உள்ளே போனார்.

"எனக்கு சினிமாப் பார்ப்பதில் அவ்வளவு ஆசை இல்லை" என்று முறையிட்டான் ராஜன்.

"எனக்கு மட்டும் என்ன ஆசையா? ஏதோ இன்று ஒரு நாள் சினிமா பார்ப்பதால் ஒன்றும் ஆபத்து வந்து விடாது" என்று கூறிவிட்டு மேஜையிலிருந்த 'ஸெண்ட்' புட்டியைத் திறந்து வாசனையைத் தம் சட்டையில் தடவிக்கொண்டார். "தம்பி! ஸில்க் ஜிப்பா அளவு ரொம்ப கச்சிதம். உத்தேசமாகத்தான் அளவு கொடுத்துத் தைக்கச் சொன்னேன். நீயும் கொஞ்சம் 'ஸெண்ட்' பூசிக்கொள்" என்று அவன் பதிலுக்குக் காத்திராமல் வாசனையை அவன் முதுகிலும் தோள் பட்டையிலும் தடவி விட்டார். "எனக்கு இதெல்லாம் எதற்கு ஸார்?" என்று பரிதாபக் குரலில் கேட்டான் ராஜன்.

சிறிது நேரத்திற்கெல்லாம் மருதாசலம் பானு, ராஜன் மூவரையும் ஏற்றிக் கொண்டு கார் சினிமாக் கொட்டகையை நோக்கிப் பறந்தது. அருகில் உட்கார்ந்திருந்த பானுவைப் பார்க்கக்கூடாது என்று நினைத்தபோது ஓரிரண்டு தடவை அவன் அவளைப் பார்த்து விட்டான். அவள் முகம் கடுமையாகத்தானிருந்தது. முதல் நாள் அவனுக்கு ஏற்பட்ட அனுபவத்துக்குப் பிறகு பானுவுடன் பேசச் சிறிதும் இஷ்டமில்லை. ஆனால் தனக்கும் பானுவுக்கும் இடையில் பேச்சை மூட்டிவிட மருதாசலம் பெரு முயற்சி செய்வது ராஜனுக்குத் தெரியாதா? ஆனால் ராஜன் அவர் வலையில் விழத் தயாராக இல்லை.

சினிமா முடிந்து வீடு திரும்பியதும் மருதாசலம் கூறிய வார்த்தைகள் அவனுக்குப் பேரிடியைப் போல் இருந்தன. "தம்பி! உன்னைப் போல் அசட்டுப் பிள்ளையை நான் பார்த்ததில்லை. பெண் பிள்ளைகளோடு எப்படிச் சாதுர்யமாகப் பேசுகிறது என்பதே உனக்குத் தெரியவில்லையே. உன் வயசுப்பிள்ளைகள் இப்படியா 'உம்' மென்று முகத்தை வைத்துக் கொண்டு உட்கார்ந்திருப்பார்கள்?" என்றார்.

"நீங்கள் சொல்லுகிறது எனக்கு ஒன்றும் விளங்கவில்லையே?" என்று குழப்பத்துடன் கேட்டான் ராஜன்.

"அட கடவுளே! இன்னுமா விளங்கவில்லை? நீ நல்ல பையன், யோக்கியமான பையன் என்பதற்காக உன்னை மாப்பிள்ளையாக்கிக் கொள்ளவேணும் என்று நினைக்கிறேன். இப்பொழுதாவது விளங்கிற்றா? அதுவும் இல்லையோ?" என்று சொல்லிச் சிரித்தார் மருதாசலம்.

ராஜனின் தலை சுற்றியது. இதைவிடத் தர்ம சங்கடமான நிலைமை வேறு இருக்க



"நான்தான் குழந்தை பிறக்க வேணும் என்று அரசமரத்தைப் பிரதட்சணம் பண்ணுகிறேன்! நீங்கள் எதற்கு மாமி? அப்பிரதட்சணம் பண்ணுகிறீர்கள்?"

"இனிமேல் குழந்தை வேண்டாம் என்பதற்குத் தான் சுற்றுகிறேன்."

---

முடியுமா? தான் பிள்ளைகுட்டிக்காரன் என்று அவரிடம் நிஜத்தைச் சொல்லி விடலாமா? அப்படிச் சொல்லி விட்டால் தான் இந்தக் கல்யாண அபாயத்திலிருந்து தப்பலாம். அப்படி நிஜத்தைச் சொன்னால், உடனே பொய் சொல்லி வேலை சம்பாதித்துக் கொண்ட குற்றம் வெளியாகும். இப்படிப்பட்ட பொய்யனுக்கு உடனே வேலையும் போகும். மறுபடியும் வறுமையின் துயரம்தான் தன்னைச் சூழும். இரு குழந்தைகளை வைத்துக் கொண்டு வேலையில்லாமல் சென்னைப் பட்டணத்தில் ... நினைக்கவும் ராஜன் நடுங்கினான்.

"தயவு செய்து என்னை நீங்கள்..." என்று ஏதோ கூற ஆரம்பித்தான் ராஜன். மருதாசலம் குறுக்கிட்டு, "எனக்குத் தெரியும் தம்பி! பானு ஏதோ மாதிரி முடுக்காக இருக்கிறாள் என்றுதானே நினைக்கிறாய்? அது பெண் பிள்ளைகள் சுபாவம். பேசுகிற விதமாகப் பேசி, பழகுகிற விதமாகப் பழகினால் எல்லாம் சரியாய்ப் போய்விடும்" என்றார்.

பேச நாவெழாமல் ஸ்தம்பித்து நின்றான் ராஜன். அவனைப் பார்த்து மருதாசலம், "ரொம்பக் களைப்பாய் இருக்கிறாய். நம் காரிலேயே வீட்டுக்குப் போய் விடு. நாளைக்குக் கணக்குகளைக் கவனிக்கலாம்" என்று கூறி டிரைவரைக் கூப்பிட்டார்.

காரில் ஏறிக் கொள்ள ராஜன் வரும் போது, மருதாசலம் ஹாலில் தம் மேஜை

மீது இருந்த பானுவின் புகைப் படத்தை எடுத்து "தம்பி ஒரு நிமிஷம்! காலையில் இந்தப் படம் கீழே விழுந்து உடைந்து விட்டது. நீ காலைக்கு வரும்போது வெள்ளி 'பிரேம்' ஒன்று போட்டுக் கொண்டு வந்து விடுகிறாயா?' என்று கூறி அவன் கையில் போட்டோவைக் கொடுத்தார். மௌனமாக ராஜன் அதை வாங்கிக் கொண்டு காரில் ஏறிக் கொண்டான்.

"ஸெண்ட் வாசனை மூக்கைப் பிய்க்கிறதே! இல்லை, இல்லை, வரவர ஒரு மாதிரியாகத்தான் இருக்கிறீர்கள்?" என்று ராஜன் உள்ளே வரும்போதே அவனை வரவேற்றாள் சாரு. சட்டென்று அவன் முகத்தைப் பார்த்துத் திடுக்கிட்ட சாரு, "என்ன நடந்தது? ஏன் இப்படி யிருக்கிறீர்கள்?" என்று பரபரப்புடன் கேட்டு நாற்காலியை இழுத்துப் போட்டாள். அவன் கையில் ஏதோ இருப்பதைக் கண்டு சாரு அதை வாங்கிப் பார்த்தாள். அதிலிருந்த பானுவின் முகத்தைப் பார்த்ததும் "திக்" கென்று அவளைத் தூக்கி வாரிப் போட்டது. மறு கணம் அவள் கண்கள் கலங்கிப் 'பொல பொல' வென்று நீர் உதிர்த்தது.

"சாரு! நீ வேறு என்னைத் தவிக்க விடாதே. நிஜத்தைச் சொல்லிவிடுகிறேன். வேலை தேடிக்கொள்வதற்காகச் சொன்ன பொய் நமக்கே ஆபத்தாய்ப் போய்விட்டது" என்று கூறி வேதாசலத்தின் மகளைப் பற்றியும் அவர் அபிப்பிராயத்தைப் பற்றியும் தன் மனைவியிடம் விவரமாகக் கூறினான் ராஜன்.

"நன்றாயிருக்கிறது. இந்த வேலையும் வேண்டாம், மண்ணும் வேண்டாம். காலைக்கே ராஜிநாமா செய்து விடுங்கள். சுவாமி விட்ட வழி விட்டும்" என்று ஆறுதலுடன் பதிலளித்தாள் சாரு.

"அதுதான் சரி! காலைக்கே இந்தப் போட்டோவுடன் என்னுடைய ராஜிநாமாக் கடிதத்தையும் மருதாசலத்துக்கு அனுப்பிவிடுகிறேன்" என்றான் ராஜன்.

*

மறுநாள் காலை எட்டு மணியிருக்கும். ராஜனின் வீட்டு வாசலில் ஒரு கார் வந்து நின்றது. அதிலிருந்து பானு இறங்கிப் பரபரப்புடன் உள்ளே வந்தாள். அவள் முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடித்தது. "இதோ அந்தப் பெண்ணே வந்து விட்டாளே! நீங்கள் விட்டாலும் அவர்கள் உங்களை விடமாட்டார்கள் போலிருக்கிறதே!" என்றாள் சாரு.

"நீ உள்ளே இரு. நிஜத்தைச் சொல்லி அனுப்பி விடுகிறேன்" என்று ராஜன் கூறிவிட்டு வாசற்பக்கம் வந்தான்.

"மிஸ்டர் ராஜன்!" என்று கூப்பிட்டுக் கொண்டே பானு வந்தாள். ராஜன் அவளை அழைத்துக் கொண்டு பக்கத்திலுள்ள அறைக்குச் சென்றான்.

"மிஸ்டர் ராஜன்! என் போட்டோவை அப்பா உங்களிடம் தூக்கிக் கொடுத்திருப்பது கொஞ்சமும் சரியல்ல. நிஜத்தைச் சொல்லி விடுகிறேன். இந்தப் போட்டோவைப் பம்பாயிலுள்ள என் நண்பர் ஜயராமனுக்கு அனுப்புவதற்காகத் தேடினேன், காணவில்லை. நீங்கள் வைத்திருப்பதாகத் தெரிந்து கொண்டு நான் வாங்கிக் கொண்டு போக வந்தேன். நான் ஜயராமனைக் கல்யாணம் செய்து கொள்ளத் தீர்மானித்து விட்டேன். அவரைத் தான் மனமார நேசிக்கிறேன். மிஸ்டர் ராஜன்! நீங்கள் படித்தவர். இஷ்டத்துக்கு விரோதமாக ஒரு பெண்ணை நீங்கள் கல்யாணம் செய்து கொள்ள நீங்கள் விரும்புவீர்களா? ஆனால் அப்பாவோ மிகவும் பிடிவாதக்காரர். அவரிடம் கெஞ்சுவதை விடத் தங்களிடம் உண்மையைச் சொல்லி உதவி செய்யும்படி கேட்பதே மேல் என்று நினைத்துத் தான் வந்தேன். என்னைக் கல்யாணம் செய்து கொள்ள இஷ்டமில்லை என்று அப்பாவிடம் சொல்லிவிடுங்கள். வேலையைப் பற்றித்தானே கவலைப் படுகிறீர்கள்? ஜயராமனுக்குச் சென்னைப் பட்டணத்திலேயே பிராஞ்சுக் கம்பெனி இருக்கிறது. அதில் உங்களுக்கு வேலை கொடுக்கச் செய்கிறேன்" என்று மூச்சு விடாமல் பேசினாள் பானுமதி.

"இது நிச்சயந்தானா?"

"நிச்சயமாக!"

அப்பொழுது 'அப்பா!' என்று கூப்பிட்டுக் கொண்டு ராஜனின் கடைக் குட்டிப் பெண் உள்ளே வந்தாள்.

"அப்பாவா?" — பானு திடுக்கிட்டாள்.

"ஆமாம்! இதோ என் மனைவி சாருவும் மூத்த பையன் ராமுவும்" என்று கூறிய போது, ராமுவைக் கையில் பிடித்த வண்ணம் உள்ளே வந்தாள் சாரு.

திகைத்து நின்ற பானுவின் முகத்தில் மாறுதல் தோன்றியது. அவள் முகம் கொஞ்சம் கொஞ்சமாக மலர்ந்து கனிவுற்றது. ராஜனைப் பார்த்து, "குடும்பஸ்தராக இருந்துகொண்டு எவ்வளவு பெரிய பொய்......!" என்றாள்.

"குடும்பஸ்தராக இருந்ததனால்தான் இந்தப் பெரிய பொய் சொல்ல நேரிட்டது" என்று கூறித் தன் நிலைமையைப் பானுவிடம் சொன்னான் ராஜன்.

சில நாட்களுக்கெல்லாம் சென்னை ஜயராம் கம்பெனி பிராஞ்சிலிருந்து ராஜனுக்கு நியமனக் கடிதம் வந்ததென்பதைச் சொல்லவும் வேண்டுமா?

# போனோமிண்ட்

## பேதியாகும் சூயிங்கம்




திவ்வியமான பப்ர்மிண்ட் மிட்டாய் போல் சுவையுள்ளது. அதிலுள்ள மருந்து சத்துக்கள் உமிழ்நீரோடு கலந்து உதர கோசங்களில் சேர்கின்றன. இது மலபோக்கை செம்மையாக எளிதில் சரிப்படுத்துகிறது.

**போனோமிண்ட் பேதியாகும் சூயிங்கம்**

சென்னை மாகாணத்துக்கு விற்பனை ஏஜண்டுகள்:

மெஸர்ஸ். ஓரியண்டல் மெர்கண்டைல் ஏஜன்ஸிஸ் 99-A, அரண்மனைக்காரத் தெரு, மதராஸ்-1

---

உலகப் பிரசித்தி பெற்ற ஜாம்பக் உபயோகிப்பதால்

## வெட்டுக்காயம், சிராய்ப்பு, சீகோத்த புண், வேக்காடு

ஆகியவை அபூர்வமாக ஆறுகின்றன

காயங்களுக்கும் சரும வியாதிகளுக்கும் உலகப் பிரசித்தி பெற்ற கிருமி நாசனக் களிம்பான ஜாம்பக் தான் சிறந்த நிவாரணி. அதிலுள்ள தைல மருந்துப் பொருள்கள் சருமத்தால் நேரடியாக உறிஞ்சப்படுவதால் அதன் ஆற்றும் தன்மை பன்மூறை துரிதமாகவும் பயன்படக்கூடியதாகவும் ஆகிறது. கேடு விளைவிக்கப்பட்ட மெல்லிய தோலுக்கு ஹிதமளித்து, விஷக் கிருமி சேர்ந்து அழுகிய சருமத்தை ஆற்றி, வேறெந்த கிருமி நாசினியையும் விட ஜாம்பக் தான் எளிதில் சொஸ்தப்படுத்துகிறது. மிருகக் கொழுப்பு கலப்பற்றது என்பதற்கு உத்தரவாதம்.






எப்பொழுதும் உபயோகியுங்கள்

# Zam-Buk

ஆறுதலளித்துக் குணமாக்கும் கிருமிநாசனக் களிம்பு

# விஜய குமாரன்

சீதா

## 2. பலிக்கும் மந்திரம்!

சபையோரும் தன்னைப் போலவே மந்திரவாதி மாய்மாலனின் வித்தைகளைக் கண்டு ஆனந்தம் அடைவதைக் கண்டு மகா ராஜாவுக்கு உண்டான சந்தோஷம் இவ்வளவு அவ்வளவல்ல. மந்திரவாதிக்கு நிறையப் பரிசுகள் வழங்க வேண்டுமென்று தீர்மானித்தார் மகாராஜா.

ஆகவே, மந்திரவாதியைக் கூப்பிட்டு "உமக்கு என்ன பரிசு வேண்டுமோ அதைக் கேளும், தருகிறேன்!" என்றார் மகாராஜா.

மந்திரவாதி ரொம்பவும் பேராசை பிடித்தவன். மகாராஜா இப்படிக் கேட்டதும், 'மகாராஜா! தங்கள் ராஜ்யமே எனக்கு வேண்டும்' என்று கேட்க ஆசைப்பட்டான். ஆனால், அப்படி வாய்திறந்து கேட்டால், சபையோர் அவனைச் சும்மா விடுவார்களா? உடனே, சிறையில் அடைத்துச் சொல்லொணாத கஷ்டங்களுக்கு உள்ளாக்கிக் கடுந்தண்டனைக்கு உள்ளாக்க மாட்டார்களா? அதனால், மந்திரவாதி மாய்மாலன் அவ்விதம் கேட்காமல், "மகாராஜா, தாங்கள் எது கொடுக்க வேண்டும் என்று விரும்புகிறீர்களோ, அதைக் கொடுங்கள் நான் சந்தோஷமாகப் பெற்றுச் செல்கிறேன். நான் யாரிடமும் இதைக் கொடுங்கள், அதைக் கொடுங்கள் என்றுகேட்பதில்லை!" என்று கூறினான்.

மந்திரவாதியின் பெருந்தன்மையைக் கண்டு பெருமகிழ்ச்சியடைந்த மகாராஜா, அவனுக்கு வேண்டிய அளவு பொன்னும் மணியும் பட்டுப் பீதாம்பரங்களும் பரிசாக வழங்கினார். மந்திரவாதி மிக்க திருப்தியுடன் அவற்றை வாங்கிக் கொண்டு வெளியேறினான். சபையும் கலைந்தது.

மந்திரவாதி தெருவழியே சென்று கொண்டிருந்த போது, இலேசாகக் காலடிச் சத்தம் அவன் காதுக்கு எட்டியது. முதலில் மந்திரவாதி அதைப் பொருட்படுத்தவில்லை. ஆனால் அந்தக் காலடிச் சத்தம் நிமிஷத்துக்கு நிமிஷம் வேகமாக அவனை நெருங்கி வந்து கொண்டிருந்தது. மந்திரவாதி பயந்து விட்டான். யாரோ திருடர்கள் போலிருக்கிறது என்று மிரண்டு திரும்பிப் பார்த்தான். என்ன ஆச்சரியம்! இளவரசன் விஜயகுமாரன் தான் அப்படி வாயு வேகம் மனோ வேகமாக அவனைப் பின் தொடர்ந்து வந்து கொண்டிருந்தான்.

இளவரசனைக் கண்டதும் மந்திரவாதி மாய்மாலன் அப்படியே திகைத்துப் போய் நின்றான். விஜய குமாரன் மாய்மாலனை நெருங்கியதும் "மந்திரவாதி! உன்னைத் தேடிக்கொண்டுதான் இவ்வளவு தூரம் வந்திருக்கிறேன்!" என்றான்.

"என்னைத் தேடிக்கொண்டா, இளவரசே! என்னால் ஆகக் கூடிய காரியம் ஏதாகிலும் இருந்தால் சொல்லுங்கள்! இந்தக் கணமே செய்கிறேன்!" என்றான் மாய்மாலன்.

"மந்திரவாதி! நீ செய்ய வேண்டிய காரியம் பிரமாதமாக ஒன்றுமில்லை. நான் நினைத்தபோது நினைத்த உருவம் எடுத்துக்

### சரியான கேள்வி!

பெரியவர்:— உன் வயது என்ன, தம்பி?

தம்பி:— ஆறு, மாமா!

பெரியவர்:— ஆறு வயது ஆகியும் நீ என்னுடைய குடை உயரம்தானே இருக்கிறாய்?

தம்பி:—அப்படியானால் உங்கள் குடையின் வயது என்ன?

கொள்ளக் கூடிய மந்திர வித்தை உனக்கு ஏதாகிலும் தெரிந்திருந்தால் எனக்கும் கொஞ்சம் சொல்லிக் கொடேன்" என்று கெஞ்சிக் கேட்டுக் கொண்டான்.

"அந்த மந்திரங்கள் எல்லாம் சொல்லித் தரக் கூடாது என்பது என் குருநாதரின் கட்டளை ஆயிற்றே இளவரசே!" என்றான் மந்திரவாதி.

விஜயகுமாரன் விடுவதாக இல்லை; மந்திரவாதியைப் பார்த்து, "என் கழுத்திலுள்ள இந்த விலை உயர்ந்த ஹாரத்தை உனக்குப் பரிசாக அளிக்கிறேன்" என்றான்.

மந்திரவாதிக்கு அந்த ஹாரத்தைப் பெற்றுக் கொள்ள வேண்டும் என்ற ஆசையுண்டாகி விட்டது. அந்த ஆசையில் மாய்மாலன் தன் குருநாதரின் கட்டளையை மறந்தான்; அந்த ரகசியத்தைச் சொல்லிக் கொடுக்கத் தொடங்கி விட்டான்.

"இளவரசே! இந்த டப்பியில் ஒரு மாவு இருக்கிறது. இந்த மாவில் கடுகளவு எடுத்து வாயில் போட்டுக் கொண்டு, நீங்கள் எந்த உருவம் பெற வேண்டும் என்று நினைக்கிறீர்களோ, உடனே அந்த உருவம் அடைந்து விடுவீர்கள்" என்றான்.

"திரும்ப என் சொந்த உருவம் அடைய வேண்டும் என்றால் என்ன செய்ய வேண்டும்?" என்று ராஜகுமாரன் கேட்டான்.

மந்திரவாதி, இந்தக் கேள்வி விஜயகுமாரன் கேட்க மறந்து போவான் என்று எதிர்பார்த்தான். ஏனெனில் விஜயகுமாரன் வேறு ஏதாகிலும் உருவம் எடுத்துக் கொண்ட பிறகு திரும்பத் தன் சொந்த உருவம் பெற முடியாமல் தவிப்பான். அப்போது, தான் விஜயகுமாரன் உருவம் பெற்று ராஜ்ய பரிபாலனம் புரியலாம் என்ற ஆசை கொண்டிருந்தான். ஆனால் விஜயகுமாரன் அப்படியெல்லாம் ஏமாறுபவனாக இல்லை. திரும்பத் தன் உருவம் அடைவது எப்படி என்று கேட்டேவிட்டான். ஆகவே, மந்திரவாதி மாய்மாலனுக்குச் சொல்ல வேண்டியதாகப் போய் விட்டது. அவனுடைய எண்ணம் கைகூடவில்லை.

மாய்மாலன் சொன்னான்: "இளவரசே! தாங்கள் எந்த உருவத்திலிருக்கிறீர்களோ, அந்த உருவத்திலேயே சூரிய பகவானை நோக்கி மூன்று முறை நமஸ்கரித்து விட்டு இந்த வார்த்தையைச் சொல்லவேண்டும்" என்று ரகசியமாக ஏதோ விஜயன் காதில் கூறினான். பிறகு பலத்த குரலில், "ஆனால் ஒன்று மகாராஜா! நீங்கள் வேறு உருவத்தை ஏற்கும்போது அந்த உருவத்துக்கு ஏற்பவே நடந்து கொள்ள வேண்டும். மனிதக் குரலில் சிரித்து விட்டீர்களானால், ஊழி ஊழி காலம் நீங்கள் எடுத்துக் கொண்ட உருவத்திலேயே இருக்க வேண்டி நேரும். ஆம், நீங்கள் சிரித்தவுடன், அந்த மந்திர மொழி உங்களுக்கு மறந்துவிடும்; மறுபடியும் மனித உருவம் அடைய முடியாமற் போகும்!" என்று எச்சரிக்கையும் செய்து, அந்த டப்பியைக் கொடுத்தான்.

## வேடிக்கைப் பாட்டு

★

வண்டி என்ன வண்டி
வடக்கே போற வண்டி
வண்டி மாடு சண்டி
வண்டிக்காரன் நொண்டி

சென்றவார விடுகதைக்கு விடை: முத்து



# ஆயிரம் பவுன் யோசனை

இங்கிலாந்தில் தீப் பெட்டி முதல் முதலாகச் செய்ய ஆரம்பித்த காலத்தில், தீக் 'குச்சி கிழிப்பதற்குப் பெட்டியின் இரு புறங்களிலும் மருந்து தடவிய காகிதங்கள் ஒட்டி வந்தார்கள். அதற்கு ஏராளமான பொருள் செலவாகி வந்தது.

ஒருநாள் அந்தக் கம்பெனியின் மானேஜரைப் பார்க்க ஒருவன் வந்தான். மானேஜரின் மேஜையிலே அழகழகாகத் தீப் பெட்டிகள் அடுக்கி வைத்திருந்தன. அதில் ஒரு பெட்டியைக் கையில் எடுத்துப் புரட்டியவாறே பேசிக் கொண்டிருந்த மானேஜர் பேச்சு வாக்கில் அவனிடம், "இந்தத் தீப் பெட்டிகள் தயாரிப்பதற்கு மாதம் இருபதினாயிரம் பவுனுக்கு மேல் செலவாகிறது. குறைக்க வழியே தெரியவில்லை!" என்றார்.

"அப்படியா?" என்று கேட்டவாறே அவன் ஒரு தீப்பெட்டியைக் கையில் வாங்கிப் புரட்டிப் புரட்டிப் பார்த்தான். பிறகு, சிறிது நேரம் ஏதோ யோசனை செய்து விட்டு, "அடேயப்பா! அவ்வளவு செலவாகிறதா? செலவில் பாதி குறைக்க நான் வழி சொன்னால் எனக்கு என்ன தருவீர்கள்?" என்று கேட்டான் அவன்.



"நீங்கள் கேட்கும் தொகையைத் தருகிறோம்!" என்றார் மானேஜர்.

"மாதம் ஆயிரம் பவுன் தர முடியுமா?" என்று கேட்டான் அவன்.

"பேஷாகத் தருகிறோம். பதினாயிரம் பவுன் மிஞ்சும்பொழுது ஆயிரம் பவுன் தருவது ஒரு பிரமாதமா?" என்றார் மானேஜர். அவருக்குச் செலவில் பாதி குறைந்துவிடப் போகிறதே என்று எல்லையற்ற மகிழ்ச்சி.

"தீப்பெட்டியின் இரண்டு புறமும் மருந்து தடவிய காகிதம் ஒட்டுகிறீர்கள் அல்லவா? ஒருபுறம் மட்டும் ஒட்டினால் போதும். செலவில் பாதி குறைந்துவிடும்!" என்று சொன்னான் அந்த மனிதன்.

அதைக் கேட்டதும் மானேஜர் துள்ளிக் குதித்தார். "அடாடா! இந்தச் சுலபமான வழி எங்களுக்குப் புலனாகாமல் போய் விட்டதே!" என்று மனம் நொந்து கொண்டார். இருந்தாலும் வாக்கு அளித்தபடி அந்த மனிதன் உயிருடன் இருந்தவரை மாதா மாதம் ஆயிரம் பவுன் கொடுத்துத் தான் ஆகவேண்டியிருந்தது. —ரா. வீ.

அதைப் பெற்றதும் விஜயன் அடைந்த சந்தோஷம் கொஞ்ச நஞ்சமல்ல. தன் கழுத்திலிருந்த முத்து மாலையைக் கழற்றி, மந்திரவாதி மாய்மாலனுக்குத் தானே அணிவித்தான்.

★

அரண்மனையை விட்டு மந்திரவாதி சென்ற அரை மணி நேரம் கழித்து ஒரு பூனை அரண்மனைக்குள் நுழைந்தது. அது நேரே மகாராஜாவின் முன் போய் நின்று 'மியாவ் மியாவ்' என்று கத்தியது. மகாராஜா 'சூ' 'சூ' என்று அதை விரட்டிப் பார்த்தார். ஆனால் அந்தப் பூனை அவரை விடுவதாக இல்லை. அவரைச் சுற்றிச் சுற்றி வந்து 'மியாவ் மியாவ்' என்று கத்திக் கொண்டேயிருந்தது. மகாராஜாவுக்கு எரிச்சலாகப் போய்விட்டது! சேவகனைக் கூப்பிட்டு, "முதலில் இந்தச் சனியனை வெளியில் கொண்டு போய் விடு; அல்லது சுட்டுக் கொன்று விடு" என்று கோபமாகக் கட்டளையிட்டார்.

அப்போது அந்தப் பூனையைப் பார்க்க வேண்டுமே! கிழக்கு நோக்கித் தலையை மூன்று முறை வணங்கியது! நாலாவது முறை அந்தப் பூனை குனிந்து எழுந்தபோது...... என்ன ஆச்சரியம்! கலகல என்று சிரித்துக் கொண்டு ராஜகுமாரன் விஜயன் நின்றான்!

மகாராஜா ஒன்றும் தெரியாமல் திகைத்தார். மகாராஜாவின் திகைப்பை அறிந்த விஜயன், "ஒன்றுமில்லையப்பா! மந்திரவாதியைக் கேட்டு நினைத்தபோது நினைத்த உருவம் எடுக்கும் மந்திர வித்தையைக் கற்று வந்தேன்! மந்திர வித்தை பலிக்கிறதா என்று பார்த்தேன்" என்றான். (தொடரும்)

# தொண்ணூறு நிமிஷம்

ஸோமாஸ்

“என்ன வைத்தி, நாடகத்துக்குப் போகலாமா?” என்று கேட்டேன், அப்பொழுதுதான் உள்ளே நுழைந்த என் நண்பன் வைத்தியைப் பார்த்து.

“ஸார், எனக்கு நாடகம் பார்க்க ஆசை தான். ஆனால் நாம் நாடகம் பார்த்து விட்டுத் திரும்பி வருவதற்குப் பத்து மணியாகி விடுமே! ஹோட்டலில் சாப்பாடு...!” என்று வைத்தி இழுத்தாற் போல நிறுத்தினான்.

“நீ என்ன அப்பா, சாப்பாடு சாப்பாடு என்று உயிரை விடுகிறாய்! இன்றைக்கு ஒரு நாள் என்னோடு வீட்டில் சாப்பிடேன். என்ன குடிமுழுகிப் போய் விடும்?” என்றேன் நான்.

வைத்தி. “சரி ஸார்! உங்கள் உத்தரவுப்படி நடக்கத் தயார். தர்ம காரியத்துக்கு உதவக் கொடுத்து வைத்திருக்க வேண்டுமே!” என்றான்.

“சரி, டிபன் தயாராகிவிட்டது. இரண்டு பேரும் சாப்பிட்டு விட்டுப் புறப்படுவோம்!” என்றேன் நான்.

“ஸார், நாலு மணி வண்டியிலேயே போய்விட வேண்டும். காலே மூக்காலுக்கு வரும் ரெய்ச்சூர் பாஸஞ்சர் வண்டியில் போனாலே போதும். நாடகம் ஐந்தரை மணிக்குத்தானே ஆரம்பிக்கிறார்கள்? ஆனால் அந்த வண்டியை நம்பக் கூடாது. அது சுதந்திர வண்டி; தன் இஷ்டம் போல்வரும். பெரம்பூரிலே குடியிருப்பதில் அதுதான் ஒரு பெரிய சிரமம். ஒவ்வொன்றுக்கும் இந்தப் பாழாய்ப் போன ரயில் வண்டியை எதிர்பார்த்துத் தவிக்க வேண்டியிருக்கிறது!” என்றான் வைத்தி அலுப்புடன்.

“அது வாஸ்தவந்தான், வைத்தி! உன்னைப் போன்ற குஷிப் பேர்வழிகளுக்குப் பெரம்பூரிலிருப்பது சிரமந்தான். ஸினிமா, கச்சேரி இதற்கெல்லாம் போய் வருவது என்றால் சிரமமாயிருக்கிறதல்லவா?” என்றேன் நான் குத்தலாக.

“ஆமாம், ஸார்! உங்களுக்கென்ன? நீங்கள் கற்பனையிலேயே காலத்தைக் கழித்து விடுவீர்கள். ரயில் வண்டிகள் தாமதமாக வருவதிலும் உங்களுக்கு ஒரு சௌகரியம் இருக்கிறது. கதை கிடைக்கிறதல்லவா?” என்றான் வைத்தி.

“அது வாஸ்தவம்!” என்றேன் நான்.

* * *

அன்று பெங்களூரிலிருந்து இராத்திரி எட்டு மணிக்கு வரும் பாஸஞ்சர் வண்டியில் என் சித்தி வருவதாகக் கடிதம் வந்தது. என் சித்தியை அழைத்துக் கொண்டு வருவதற்குப் பெரம்பூர் ஸ்டேஷனுக்குப் போனேன். என் கூடவே என் நண்பன் வைத்தியும் வந்தான்.

பிளாட்பாரத்திலிருந்த பெஞ்சியில் நானும் வைத்தியும் உட்கார்ந்தோம்.

“வைத்தி, ஸ்டேஷன் மாஸ்டர் அறைக்குப் பக்கத்தில் போய்ப் பார்த்து விட்டு வாயேன், பெங்களூர் பாஸஞ்சர் எத்தனை மணிக்கு வருகிறது என்று! நேரம் ஆகி விட்டது” என்றேன்.

வைத்தி அங்கே போய்ப் பார்த்து விட்டு வந்து. “ஸார், வண்டி இன்றைக்குத் தொண்ணூறு நிமிஷங்கள் தாமதமாக வருகிறது!” என்றான்.

“சரி, நல்லதாய்ப் போயிற்று. வண்டி இன்றைக்கு எப்படியும் வருகிறதல்லவா? அவ்வளவுதான் நமக்கு வேண்டியது!”

“ஏன் ஸார், ஒன்றரை மணி நேரம் தாமதமாக வருகிறது என்று போர்டில் போட்டால் என்ன? தொண்ணூறு நிமிஷங்கள் என்று போடுவானேன்?” என்று கேட்டான் வைத்தி.

“ஒன்றரை மணி நேரம் ‘லேட்’ என்று போட்டால் அதைப் பார்த்து நீ மூர்ச்சையாகி விழுந்து விட்டால் ரயில்வேக்காரர்கள் உன்னை மூர்ச்சை தெளிவிக்கப் பண்ணிக் கொண்டிருக்க முடியுமா? அதற்காகத்தான்!” என்றேன் நான்.

“வாஸ்தவம், ஸார்! எப்பொழுதும் இப்படித்தான் எம். எஸ். எம். வண்டிகள் தாமதமாக வருகின்றன! மணிக் கணக்கைப் போட்டால் சிரமமாகத்தான் இருக்கும்!” என்றான் வைத்தி.

“சில சமயம் ரயில் வண்டிகள் குறித்த காலத்துக்கு வந்து நம்மைத் திணற வைத்து விடுகின்றன. அந்த அதிசயம் மூந்தா நாள் சென்ட்ரல் ஸ்டேஷனில் நிகழ்ந்தது. காலை ஒன்பது இருபதுக்குப் புறப்பட வேண்டிய டில்லி எக்ஸ்பிரஸ் வண்டி ஒன்பது இருபதுக்கே புறப்பட்டது! இதே மாதிரி அன்றைக்கு எல்லா மெயில்களும் எக்ஸ்பிரஸ்களும் குறித்த காலத்தில் வந்து சேர்ந்தன! இது ரொம்ப அதிசயமில்லையா!” என்றேன் நான்.

அப்பொழுது இன்னொருவர், ஏற்கெனவே மற்றொரு பெஞ்சியில் உட்கார்ந்திருந்தவர், எழுந்து எங்களை நெருங்கினார்.

“ஸார், நம் வாழ்க்கையில் எத்தனையோ அதிசயங்கள் நிகழ்ந்து கொண்டுதான் இருக்கின்றன. நாம்தான் அவற்றை அதிகமாகப் பொருட்படுத்துவதில்லை. அதே அதிசயங்கள் கதையில் நிகழ்ந்தால்

ஆவென்று வாயைப் பிளந்து கொண்டு படிப்போம்!'' என்று சொல்லிவிட்டு என் அருகில் உட்கார்ந்தார்.

"ஸார், வண்டி வருவதற்கு எப்படியும் தொண்ணூறு நிமிஷங்கள் ஆகும்; அது வரையில் நிறையப் பொழுது இருக்கிறது. உங்களுக்கு ஆட்சேபணை இல்லையென்றால் முன்பு நிகழ்ந்த அதிசயச் சம்பவம் ஒன்றைச் சொல்லுகிறேன். இந்த எம். எஸ். எம். வண்டி தாமதமாக வந்ததனால் ஒருவர் உயிர் தப்பபிழைத்த அதிசயத்தையும் நீங்கள் கேட்பீர்கள்!'' என்றார்.

உடனே, வைத்தி, "ஸார், உங்கள் பாடு கொண்டாட்டந்தான். ஒரு நல்ல கதை கிடைக்கும் போலிருக்கிறது!'' என்றான் என்னைப் பார்த்து.

"வைத்தி, நீயுந்தான் கதையைக் கேளேன்!'' என்று சொல்லிவிட்டு, "ஸார், நீங்கள் அந்தச் சம்பவத்தைச் சொல்லுங்கள்!'' என்றேன் அவரைப் பார்த்து.

"கதை தொண்ணூறு நிமிஷங்களுக்குள் முடிந்து விடும் அல்லவா?'' என்றான் வைத்தி, அவரைப் பார்த்து.

"வைத்தி, தயவு செய்து பேசாமல் கேள்!'' என்றேன் நான்.

அந்த ஆசாமி தொண்டையை ஒரு முறை கனைத்துக் கொண்டு ஆரம்பித்தார்:

பதினைந்து வருஷங்களுக்கு முன்பு விநாயகராவ் என்ற பிரபல நகை வியாபாரி ஒருவர் இருந்தார். அவர் பெரிய பணக்காரர். ஆனால் ஒரு காசுகூடச் செலவு செய்யமாட்டார். அதன் காரணமாக அவரிடம் ஏராளமான பணம் சேர்ந்து போயிருந்தது.

அவர் யாரையும் நம்பமாட்டார். அப்படிப்பட்டவர் பாங்கியை லேசில் நம்புவாரா? ஆகவே அவர் தம் வீட்டிலேயே ஒரு இரும்புப் பெட்டியில் பணத்தை ஜாக்கிரதையாகச் சேர்த்து வைத்திருந்தார்.

அவருடைய நண்பர்களெல்லோரும், "மிஸ்டர் விநாயகராவ், நம்ம வீட்டின் மேல் ஒரு ஐயாயிரம் ரூபாய் கொடுங்கள்!'' "நம்ம வியாபாரத்தில் ஷேர் எடுத்துக் கொண்டு ஒரு பத்தாயிரம் ரூபாய் போடுங்களேன்! நல்ல லாபம் வரும்!'' என்றெல்லாம் சொல்லிப் பார்த்தனர். விநாயகராவ் அதற்கெல்லாம் சிறிதும் அசைந்து கொடுக்கவில்லை.

விநாயகராவ் தன் கடையிலும் வேறு யாரையும் வேலைக்கு வைத்துக் கொள்ளவில்லை. யாரையாவது வைத்துக் கொண்டால் அவன் மாதாமாதம் சம்பளம் அல்லவோ கேட்டுத் தொலைப்பான்!

மிஸ்டர் விநாயகராவுக்கு அழகே வடிவெடுத்து வந்தது என்று சொல்லும்படி சுலோசனா என்ற பெண் இருந்தாள். அவளுக்குத் தகப்பனாரின் சுபாவமே பிடிக்காது. வானம்பாடியைப்போல் இஷ்டப்படித் திரிந்து வரவேண்டுமென்பது அவள் விருப்பம். விநாயகராவ் தன் அருமை மகள் சுலோசனா ஒருத்தி விஷயத்தில்தான் தன் கடுமையான சிக்கனத் திட்டத்தைத் தளர்த்தியிருந்தார். அவர் அப்படி அவளுக்கு அதிகமாக நகைநட்டுகள் போடாவிட்டாலும், சுலோசனா, தகப்பனார் தனக்குப் போட்ட நகைகளுக்கெல்லாம் தனி அழகைத் தந்தாள்.



மலர்ந்த ரோஜாவைப்போன்ற சுலோசனாவிடம் மணிவண்ணன் என்னும் வாலிபன் தன் மனத்தைப் பறிகொடுத்தான். சுலோசனாவும் மணிவண்ணனுக்குத் தன்னுடைய மனத்தில் தாராளமாக இடந் தந்தாள்.

இந்தச் சமயத்தில்தான் தாமோதரம் இந்த ஊருக்கு வந்து சேர்ந்தான். அவன் பலே பேர்வழி. விநாயகராவின் பணத்தை எப்படியாவது அமுக்கிக்கொண்டு போகத் திட்டமிட்டான் அச்சமயம் அழகி சுலோசனா அவன் கண்ணில் பட்டுத் தொலைத்தாள். பிறகு அவளுடைய உள்ளத்தையும் சேர்த்து

அபகரிக்கப் பெரிய திட்டமாகப் போட்டான், தாமோதரம்.

கயிலாசனுவின் உள்ளத்தைக் கவருவதற்கு முதலில் தாமோதரம் பணக்காரனுக வேண்டும். அதற்கு வழி? விநாயகராவ்தான் இருக்கிறுரே!

தாமோதரத்தின் அதிர்ஷ்டம், ஒரு நாளும் இல்லாத திருநாளாக விநாயகராவ் ஒரு ஆர்டர் காரணமாகத் திருவள்ளூருக்குச் சென்றுர். மாலையில் கடையைப் பூட்டிவிட்டு அந்தப் பூட்டை முப்பது தடவை இழுத்துத் தொங்கிப் பார்த்து விட்டுத்தான் போனுர்.

கொஞ்ச நேரத்துக்கெல்லாம் தாமோதரம் அந்தக் கடையின் பின்புறத்து ஜன்னல் கம்பிகளை நீக்கிக் கொண்டு கடைக்குள்ளே குதித்தான். விநாயகராவ் தம்முடைய பணத்தில் பெரும் பகுதியைக் கடையில் இரும்புப் பெட்டியிலேயே வைத்திருக்கிறுர் என்னும் சங்கதி அவனுக்குத் தெரியும். அவன் மறு சாவி போட்டுப் பெட்டியைத் திறந்தான்.

அவன் பெட்டியைத் திறந்ததுதான் தாமதம். கடைக் கதவு திறக்கும் சத்தம் கேட்டது. விநாயகராவ் எதிர்பாராத விதமாக உள்ளே நுழைந்தார். இந்தச் சரியான சமயத்தில் சொல்லி வைத்த மாதிரி அவர் வந்ததற்குக் காரணம் திருவள்ளூர் போகும் 'லோக்கல் வண்டி' தொண்ணூறு நிமிஷம் தாமதமாக வருகிறது என்னும் செய்தி கேட்டு அவர் பிரயாணத்தை இன்னொரு நாளைக்கு ஒத்திப் போட்டு விட்டதுதான்.

தாமோதரம் பற்பல விதமான யோசனைகளுக்கு இடம் கொடுக்கவில்லை. ஏற்கெனவே அபாயமான சந்தர்ப்பத்தை எதிர்பார்த்து வைத்திருந்த தடியை எடுத்துப் பின்புறமாக வந்து விநாயகராவின் தலையில் ஒரே போடாகப் போட்டு அவர் வாயைக் கையால் இறுகப் பொத்திக் கொண்டான். விநாயகராவ் மூர்ச்சையாகிக் கீழே சாய்ந்தார்.

தாமோதரத்தின் உடல் பதறியது. நெஞ்சு திக் திக் கென்று அடித்துக்கொண்டது. கைகள் நடுங்க அவன் விநாயகராவை இழுத்துப் பீரோவின் அடியில் மறைத்து வைத்தான். கடைக் கதவு திறந்தவண்ணம் இருந்தது. எந்த நிமிஷத்தில் என்ன நேருமோ என்று அவன் பயந்தான். கடைக்கு யாராவது வந்து தொலைந்தால்? ஆகவே கடைக் கதவைச் சாத்திவிட்டு வாசல் வழியாக ஓடி விடுவது என்று தீர்மானித்தான். நோட்டுக் கத்தைகளை எடுத்துப் பையில் திணித்துக் கொண்டு அவசரம் அவசரமாக வாசற் கதவை நெருங்கினுன்.

தாமோதரம் கடை வாசலை நெருங்கிய சமயம் நாகரிக உடை யணிந்த ஒருவன் வாசற்படியேறி வந்தான். அவன் எதிரே வந்த தாமோதரத்தைப் பார்த்து, "மிஸ்டர் விநாயகராவ் இருக்கிறுரா? அவரிடம் ஒரு சமாசாரம் சொல்ல வேண்டும்!" என்று கூறிக் கொண்டே உள்ளே நுழைந்தான்.

தாமோதரம் ஒன்றும் தோன்றுமல், பதில் பேசாமல் வேகமாக வந்து அவனை உள்ளே விட்டுக் கதவைச் சாத்தினுன். பீரோவுக்கு அடியில் கிடக்கும் விநாயகராவை அவன் பார்த்து விட்டால்...? இதற்கு என்ன செய்வது என்று அவனுக்குத் தெரியவில்லை.

கடைக் கதவில் ஸ்பிரிங் பூட்டு அமைக்கப் பட்டிருந்தபடியினுல் அது தாமோ

## எழுதிக் கேட்கலாம்!

★

"ஆரோக்கிய ரகசியம்" என்ற பகுதியில் வெளியாகும் யோக ஆசனங்களைப் பற்றிப் பெண்மணிகள் தங்களுக்கு ஏற்படும் சந்தேகங்களுக்கு, "ஸ்ரீமதி சீதாலக்ஷ்மி குமாரசாமி, 216, திருவொற்றியூர் ஹை ரோடு, தண்டையார்ப் பேட்டை, சென்னை, 21" என்ற விலாசத்துக்கு எழுதிக் கேட்டுக் கொள்ளலாம்.





**சென்ற வாரம் நாகபுரியில் தென்னிந்திய மாதர் சங்கத்தின் ஆதரவில் "சுபத்ரா பரிணயம்" என்னும் தமிழ் நாடகம் மிகவும் சிறப்பாக நடந்தது. அந்த நாடகத்தில் நடித்த நடிகர்களை மேலேயுள்ள படத்தில் காணலாம்.**

---

தரம் சாத்தின வேகத்தில் தானாகவே பூட்டிக் கொண்டு விட்டது.

தாமோதரத்தின் இருதய ஓட்டமே நின்று விட்டது. ஆனால் ஒரு சில விநாடிகள்தான். அதற்குள் ஒரு தீர்மானத்துக்கு வந்து விட்டான். விநாயகராவை அடித்த அதே தடியை எடுத்தான்.

கடையில் இருள் சூழ்ந்து விடவே வந்த ஆசாமிக்கு ஒன்றுமே புரியவில்லை.

"என்ன ஸார், கடையை மூடி விட்டீர்கள்! விநாயகராவ் இல்லையா?" என்று ஏதேதோ கேட்டான்.

தாமோதரம் பதில் பேசாமல் கைத் தடியை ஓங்கினான்.

இந்த சமயம் டக்கென்று ஸ்விச் போடப்பட்டது. பீரோவின் பின் பக்கத்திலிருந்து மூக்காடு தரித்த ஒரு உருவம் வந்து தாமோதரத்தின் கையிலிருந்த தடியைப பிடுங்கியது; சட்டென்று தாமோதரம் அந்த உருவத்தின் மேல் பாய்ந்து அதனுடைய முகத்தின் மீதிருந்த கறுப்பு மூடியை அப்புறப்படுத்தினான்.

அதற்குள் இந்த அதிசயத்தைத் தொடர்ந்து இன்னொரு அதிசயமும் விழுந்தது. விநாயகராவ் கடைக் கதவைத் திறந்து கொண்டு கடந்தது எதையும் அறியாதவர் போல் உள்ளே நுழைந்தார்.

இத்துடன் கதையை நிறுத்தி விட்டு. அந்த மனிதர் ஒரு களைப்புக் களைத்துக் கொண்டு, "நான் இப்பொழுது சொல்லிய கதை உங்களை ஒரேயடியாகக் கலவரப்படுத்தி யிருக்கலாம். இதன் தொடர்ச்சியை, அதாவது தாமோதரத்தின் கதி என்னவாயிற்று? கலோசனு எப்படி அங்கே வந்தான்? தாமோதரத்தினால் கடைக்குள் அடித்து வீழ்த்தப்பட்ட விநாயக ராவ் சொஸ்தமாகி வெளியிலிருந்து வந்த மர்மம் என்ன? விநாயகராவைத் தேடிக்கொண்டு வந்தவன் யார்? என்பவைகளையெல்லாம் அடுத்த ஞாயிற்றுக் கிழமை எங்கள் நாடகக் கம்பெனியார் ஒரு தர்ம ஸ்தாபன நிதிக்காக நடத்தப் போகும் நாடகத்தில் வந்து பாருங்கள்." டிக்கெட்டு மூன்று ரூபாயிலிருந்து பத்து ரூபாய் வரையில் இருக்கிறது. இரண்டு டிக்கட்டுகள் தரட்டுமா?" என்று கேட்டு விட்டுத் தம் கையிலிருந்த டிக்கெட்டுகளை எடுத்தார்.

நான் அவர் சொன்ன கதையிலேயே லயித்துக் கிடந்தேன். பெங்களூர் பாலஞ்சர் தூரத்திலிருந்து அலறித் தன் வருகையை அறிவித்தது

"தொண்ணூறு நிமிஷங்கள் ஆகி விட்டன, ஸார்!" என்றான் வைத்தி.

"நேரம் போனதே தெரியவில்லை!" என்று சொல்லிக்கொண்டே, பணத்தைக் கொடுத்து அவரிடமிருந்து இரண்டு டிக்கெட்டுகளை வாங்கிக் கொண்டேன்.

# சஞ்சீவி மருந்து

கி. ரா. கோபாலன்

(சென்ற வாரத் தொடர்ச்சி)

ராமமூர்த்திக்கு ஓரத்தநாட்டில் தன்னுடைய சிறு வயதில் பழகிய சில சிநேகிதர்கள் அகப்பட்டார்கள். அவர்களுக்குத் தன்னைப்பற்றி ஞாபகப்படுத்த வேண்டிய சிரமம் அதிகமாய் இருந்தாலும் அவர்கள் அவனை யாரென்று தெரிந்து கொண்ட வுடனே மிகவும் பரிவோடு பழகலானார்கள். இந்தச் சிநேகிதர்களால் அவனுக்கு அந்த ஊரில் பொழுது போவது சுலபமாக இருந்தது. ஒழிந்த நேரங்களிலெல்லாம் அவர்களோடு சேர்ந்து சீட்டாடுவது கலங்கி நின்ற அவன் மனத்துக்குச் சிறிது ஆறுதலளிக்கக் கூடியதாய் இருந்தது.

அன்று அவன் நெடுநேரம் வரையில் சீட்டாடி விட்டுப் பகல் ஒரு மணிக்குத்தான் சாப்பிடுவதற்காக வீட்டுக்கு வந்தான். அவன் வீட்டுக்குள் நுழைந்ததும் தாழ்வாரத்தில் பார்வதி யாரோ ஒரு பெண்ணுடன் பல்லாங்குழி விளையாடிக் கொண்டிருந்தாள். ராமமூர்த்தியைக் கண்டதும் அந்தப் பெண் பரபரப்போடு எழுந்து நின்றாள். அவள் அவனைக் கண்டதும் அப்படி மிரண்டு நிற்பதைப் பார்த்துப் பார்வதி 'கல கல' என்று சிரித்து விட்டு, "இவன் எங்கள் அம்மாஞ்சி. சிங்கம் புலி இல்லை. தெரிந்ததா! பயப்படாதே, உட்காரு, விளையாடலாம்!" என்றாள்.

ராமமூர்த்தி அந்தப் பெண்ணை ஒரு தடவை பார்த்தான். அவள் மிரண்டு மிரண்டு விழித்துக் கொண்டே தன் வெட்கத்தை ஒருவிதமாகச் சுதாரித்துக் கொண்டு மறுபடியும் உட்கார்ந்து பார்வதியோடு விளையாடத் தொடங்கினாள். ராமமூர்த்தி தனக்குள் சிரித்துக் கொண்டே உள்ளே போனான்.

ராமமூர்த்தி சாப்பிட்டு விட்டுத் தாழ்வாரத்துக்கு வந்த போது பார்வதியை மாத்திரம்தான் பார்க்க முடிந்தது. அவளுடைய தோழியைக் காணோம். அந்தப் பெண்ணை அவன் ஒரு கண நேரம்தான் பார்க்க நேரிட்டாலும் அந்தப் பெண்ணின் முகம் அவன் நெஞ்சில் நிரந்தரமாகப் பதிந்து விட்டது. அந்தப் பெண் யாரென்று விசாரிக்க வேண்டுமென்ற சிரத்தை அவனுக்கு எப்படியோ ஏற்பட்டது. தன்னைக் கண்டதும் அந்தப் பெண்ணுக்கு ஏன் அவ்வளவு வெட்கம் ஏற்பட வேண்டுமென்றுதான் அவனுக்குப் புரியவில்லை. இயற்கையாகத் தோன்றும் வெட்கமும் நாணமும் சில பெண்களுக்கு மிகவும் கவர்ச்சியையும் அழகையும் கொடுக்கின்றன என்ற உண்மையை அப்பொழுதுதான் அவன் உணர்ந்து கொண்டான். ராமமூர்த்திக்குப் பார்வதியிடம் மோகம் இருந்தது உண்மைதான். இருந்தாலும் அன்று அவன் பார்த்த பெண்ணும் பார்வதியை விட அழகில் குறைந்தவளில்லை. அவளுடைய மனத்தைக் கவரும் வசீகர சக்தி இருக்கிறது என்பதை அவன் உணர்ந்து கொண்டான். இல்லாவிட்டால் அவன் மறுபடியும் தாழ்வாரத்துக்கு வந்த பொழுது அவன் கண்கள் அந்தப் பெண்ணைத் துருவித் துருவித் தேடுமா!

"பார்வதி, அந்தப் பெண் யார்!" என்றான் ஏதோ போகிற போக்கில் விசாரித்துத் தெரிந்து கொள்ள நினைப்பவன் போல்.

"யாராய் இருந்தால் உனக்கென்ன! ஊரில் எனக்கு எத்தனையோ பெண்கள் சிநேகிதம். அவர்களை யெல்லாம் பற்றி நீ தெரிந்து கொண்டு என்ன ஆக வேண்டும்!" என்றாள் பார்வதி, கேலியாகச் சிரித்துக் கொண்டே.

"எனக்கென்ன ஆகவேண்டும்! சாதாரணமாய்க் கேட்டுத் தெரிந்து கொள்ளலாமே என்று ஆசை. அவ்வளவுதான். அவள் ரொம்ப சங்கோசியாக இருப்பாள் போலிருக்கிறதே!" என்றான் ராமமூர்த்தி.

"ஆண்பிள்ளைகளைக் கண்டால் எந்தப் பெண்தான் சங்கோசப்பட மாட்டாள்! அதுவும் இந்த ஊரில் உள்ள பெண்களெல்லாம் அப்படித்தான். ஒரு வேளை பம்பாயிலுள்ள பெண்களெல்லாம் ஆண்பிள்ளைகளிடம் சங்கோசமில்லாமல் இருக்கலாம். அப்படித்தானே!" என்று குறும்பாகச் சிரித்துக் கொண்டே கேட்டாள் பார்வதி.

பார்வதி நானுக்கு நான் தன்னிடம் இவ்வளவு சகஜமாகவும் கேலியாகவும் பேசுவாள் என்று ராமமூர்த்தி சிறிதும் எதிர்பார்க்கவே இல்லை. அவன் சிரித்துக் கொண்டே தாழ்வாரத்திலுள்ள பெரிய நிலைக் கண்ணாடியின் முன் நின்று தன் கிராப்புத் தலையைப் படிய வாரிக் கொண்டிருந்தான். அந்தச் சமயத்தில் அவனுடைய அத்தையும் தாழ்வாரத்துக்கு வந்தாள். அவனைக் கண்டதும் பார்வதி, "நான் அப்பொழுதே சொன்னேனே, அப்படியே தான் முடிந்து விட்டது! லலிதாவை ஒரு தடவை பார்த்தவுடனே அம்மாஞ்சிக்கு அவளைப் பற்றி எவ்வளவு கவலை ஏற்பட்டு விட்டது, தெரியுமா! 'அவள் யாரு! என்ன! அவள் ஏன் அப்படி இருக்கிறாள்! இப்படி இருக்கிறாள்!' என்றெல்லாம் சரமாரியாய் என்னைக் கேள்விமேல் கேள்வி கேட்க ஆரம்பித்து விட்டான்!" என்றாள்.

மங்களத்தம்மாள் சிரித்துக் கொண்டே, "அப்படித்தானிருக்கும். என்ன பிரமாதம்! அது நினைத்தால் முடிகிற காரியம். ஏண்டா, உன் மனத்துக்கு அந்தப் பெண் பிடித்திருக்கிறதோ இல்லையோ, சொல்லு! கண்ணுக்கு லட்சணமாக இருக்கிறாள். அடக்க ஒடுக்கமான பெண்ணு, ரொம்ப குடித்தனப் பாங்கான பெண்ணு! சின்னக் குடும்பம்......" என்றாள்.

"என்னம்மா அப்படிச் சொல்லுகிறாய்! வாழைப் பழம் வேண்டாத குரங்கு உண்டா! அம்மாஞ்சி அவளைப் பார்த்த பார்வையும், அவள் அவனைப் பார்த்த பார்வையும் எல்லாம்



எனக்கு விளங்கிவிட்டது; இனிமேல் பேசவே வேண்டாம்......'' என்றாள் பார்வதி குறும்பாக.

''அப்படி என்றால் நான் குரங்கா ......!'' என்றான் ராமமூர்த்தி.

''நீதான் கண்ணாடியைப் பார்த்துக் கொண்டே நிற்கிறாயே! உன் உருவம் உனக்குத் தெரியாதா! நான் குரங்கு என்று சொன்னாலும் நீ லேசில் ஒப்புக்கொண்டு விடப்போகிறாயா!'' என்றாள் பார்வதி.

பார்வதி இவ்வளவு வாய்த் துடுக்காக இருப்பாள் என்று ராமமூர்த்தி ஆரம்பத்தில் நினைக்கவே இல்லை. பழகப் பழகத்தான் அவளோடு பேசி மீள முடியாது என்பதை அவன் தெரிந்து கொண்டான். பார்வதி இப்படிப் பேசினாலும் வினையற்ற உள்ள முடையவள் என்பதையும் அவன் உணர்ந்து கொண்டான். ''பாவம்! உன்னைக் கல்யாணம் செய்துகொள்ளப் போகிறவனைப் பார்த்தால் ரொம்ப சாதுவாய் இருக்கிறான். நீ அவனை என்னபாடு படுத்தி வைக்கப் போகிறாயோ!'' என்றான்.

மங்களத்தம்மாள் அவர்கள் இருவருடைய தர்க்கத்துக்கும் இடையூறாக இல்லாவிட்டால் அது வளர்ந்துகொண்டே போயிருக்கும். அவள் இடைமறித்து, ''போதும், உங்கள் பேச்சு! அது கிடக்கட்டும்; உனக்கு லலிதாவைப் பிடித்திருக்கிறதோ இல்லையோ?'' என்றாள்.

ராமமூர்த்தியால் பளிச்சென்று பதில் சொல்ல முடியவில்லை. சிறிது தயங்கினான். இப்பொழுது அவன் யோசித்து முடிவு கட்டப் புதிதாய் ஒன்று மில்லை. அவன் அந்த ஊருக்கு வந்த நாளிலிருந்து அவன் உள்ளத்தில் இருள் சூழ்ந்திருந்தது. அர்த்தமற்ற வெறியும் குழப்பமும்தான் அவனுடைய மனத்தை ஆட்டி வைத்துக்கொண்டிருந்தன. இதற்கெல்லாம் காரணமாய் இருந்தவள் பார்வதிதான். ஆனால் இன்று மத்தியானம் லலிதாவின் கண் பார்வை அவன் மீது விழுந்ததிலிருந்து எப்படியோ அவன் மனத்திலிருந்த குழப்ப மெல்லாம் பறந்தோடி விட்டது. பார்வதியின் மேல் கொண்டிருந்த மோகப் பித்தை லலிதாவின் மருண்ட பார்வை தெளிவடையச் செய்து விட்டது. உலகத்தில், பார்வதியிடம்தான் மனத்தை வசீகரிக்கும் அழகு இருக்கிறது. அவளால் தான் தன் வாழ்க்கை சோபிக்க வேண்டும் என்ற அவனுடைய அபிப்பிராயத்தைத் தவறு என்று உணரச் செய்து விட்டன லலிதாவின் பார்வையும் அழகும். அத்தையிடம் தன்னுடைய பூரணமான சம்மதத்தைப் பகிரங்கமாகச் சொல்லத் தயங்கினானே தவிர, தன் ஆசையையும் இஷ்டத்தையும் அவனால் வெளிக் காட்டிக் கொள்ளாமல் இருக்க முடியவில்லை. ''நீ பார்த்து நல்ல பெண் என்று சொன்னால் சரிதான், அத்தை!'' என்றான் ராமமூர்த்தி கண்ணாடியைப் பார்த்துக் கொண்டே.

''சரி; நாளைக்கே எல்லாவற்றையும் பேசி முடித்து விடுகிறேன்'' என்று சொல்லி விட்டு மங்களத்தம்மாள் உள்ளே சென்றாள்.

லலிதாவுக்கும் ராமமூர்த்திக்கும் கல்யாணம் செய்து வைக்க வேண்டிய ஏற்பாடுகளை யெல்லாம் மங்களத்தம்மாள் தீவிரமாகச் செய்யத் தொடங்கினாள். சம்பிரதாய தோரணையில் பெண் பார்க்கப் போகும் வியாஜத்தில் மறுபடியும் லலிதாவைப் பார்க்கும் பாக்கியம் ராமமூர்த்திக்குக் கிடைத்தது. பார்வதியின் கல்யாண முகூர்த்தத்தோடு ராமமூர்த்திக்கும் விவாகம் செய்து விடுவதாய்ப் பெரியோர்களால் நிச்சயிக்கப்பட்டது.

ராமமூர்த்தியின் மனத்தில் போராட்டம் ஓய்ந்து ஒரு அமைதி ஏற்பட்டது. ஒவ்வொரு நாளாக ஓடிக்கொண்டிருந்தது.

## 4

திடீரென்று ஒரு செய்தி எல்லோரையும் திகைப்பில் ஆழ்த்தியது. பார்வதியைக் கல்யாணம் செய்து கொள்வதாகப் பேசி முடிவு கட்டிய வரன் விஷயமாக ஒரு தகராறு ஏற்பட்டது. எல்லாம் பண விஷயம். வரதக்ஷிணை விஷயத்தில் அவர்கள் மேலும் ஆயிரம் ரூபாய் அதிகமாக விரும்பினார்கள். சங்கரய்யருக்கு அந்த அளவுக்குப் பணம் கொடுத்துக் கல்யாணம் செய்து வைக்கச் சக்தியும் இல்லை; இஷ்டமு மில்லை. பேச்சு முறிந்து கல்யாணம் நின்று விட்டது.

ராமமூர்த்தி இதை அறிந்ததும் மிகவும் மன வருத்தமடைந்தான். அவன் என்ன செய்வான்! அவனுக்கும் லலிதாவுக்கும் ஏற்படவிருக்கும் கல்யாணத்துக்கு வேண்டிய ஏற்பாடுகளெல்லாம் துரிதமாகத் தான் நடந்து கொண்டிருந்தன. பார்வதியின் கல்யாணத்துக்குத் தடங்கல் ஏற்பட்டதன் காரணமாக ராமமூர்த்தியின் கல்யாணத்துக்கும் தடங்கல் ஏற்பட்டுவிடுமென்று அவன் நினைக்கவேயில்லை. ஆனால் அவனுடைய அத்தையின் அபிப்பிராயம் சட்டென்று மாறிவிட்டதை அவன் எப்படி அறிவான்! வெண்ணெயை வைத்துக்கொண்டு ஏன் நெய்க்கு அழவேண்டும்! பார்வதிக்கும்

ராமமூர்த்திக்கும் கல்யாணம் செய்துவிட்டால் என்ன! மங்களத்தம்மாளுக்குப் பளிச்சென்று இப்படி ஒரு அபிப்பிராயம் தோன்றியதில் தவறில்லை. ஆனால் ராமமூர்த்தியின் மன நிலையையோ, லலிதாவின் நிலையையோ பார்வதியின் அபிப்பிராயத்தையோ தெரிந்து கொள்ள வேண்டுமென்ற நினைவே அவளுக்கு இல்லை. தன் பெண்ணுக்கு எப்படியாவது அந்த முகூர்த்தத்தில் கல்யாணம் செய்துவிட வேண்டுமென்ற துடிப்புத் தான் மங்களத்தம்மாளுக்கு அதிகமாக இருந்ததே தவிர, வேறொரு பெண்ணுக்குத் தானே முயற்சி செய்து ஏற்பாடு செய்த வரனைக் கலைக்கிறோமே என்ற எண்ணமே ஏற்படவில்லை. ராமமூர்த்தியைக் கலந்து ஆலோசிக்காமலே மங்களத்தம்மாள் லலிதாவின் வீட்டுக்குச் சென்று பார்வதிக்கு நிச்சயிக்கப்பட்ட வரன் தட்டி விட்டதால் ராமமூர்த்திக்கே தன் பெண்ணைக் கொடுப்பதாக நிச்சயித்து விட்டதாகவும், ஆகவே லலிதாவுக்கு வேறு வரன் பார்த்துக் கொள்ளும்படியும் சொல்லிவிட்டு வந்துவிட்டாள்.

அத்தையின் மனப்போக்கை யறிந்த ராமமூர்த்தி திடுக்கிட்டான். பார்வதியைக் கல்யாணம் செய்துகொள்ள வேண்டுமென்று அவனுக்கு ஒரு காலத்தில் ஆசையாக இருந்தது. ஆனால் இப்பொழுதோ அவன் மனத்தை அடியோடு மாற்றிக் கொண்டு விட்டான். அவனா மாற்றிக் கொண்டான்! லலிதா அல்லவா அடியோடு மாற்றிவிட்டாள்! அது மட்டுமா! அவளே அல்லவா அவன் மனப்பீடத்தையும் ஆக்கிரமித்துக் கொண்டு விட்டாள்! அந்த இடத்தில் மறுபடியும் பார்வதியை அமர்த்தி வைப்பது என்பது முடியாத காரியம் என்பதை அவன் உணர்ந்து கொண்டான். அதில் அவனுக்கு இஷ்டமுமில்லை. ஆனால் அத்தையின் வார்த்தையை மறுதளிப்பதும் அவனுக்குச் சிரமமாகத்தானிருந்தது. அவன் எவ்வித மான முடிவுக்கும் வர முடியாத தர்ம சங்கடமான நிலைமையில் இருந்து தத்தளித்தான். உலகத்தில் அவனுக்கு ஒரே ஒரு உறவு என்று சொல்லிக் கொள்ளக் கூடிய அத்தையின் விரோதத்தைச் சம்பாதித்துக் கொள்ள அவன் விரும்பவில்லை. அத்தை தன்னைக் கலந்தாலோசிக்காமலேயே ஒரு முடிவு கட்டி விட்டது அவனுக்குப் பெரிய ஆச்சரியத்தை அளித்தது. அப்பொழுது பார்வதியின் மன அபிப்பிராயம் எப்படி இருக்கும் என்று அவனுக்கு விளங்கவில்லை. பார்வதி எப்பொழுதும் போல் சகஜமாகப் பேசிக் கொண்டிருந்தாள். ஆனால் அவள் முகம் சிறிது வாட்டமடைந்து இருந்ததிலிருந்து அவளுடைய அந்தரங்கத்தில் ஏதோ இருப்பதாகத் தான் அவனுக்குத் தோன்றியது.

ராமமூர்த்தி ஏதோ யோசனையிலாழ்ந்து உட்கார்ந்திருந்தான். பார்வதி அவன் எதிரில் வந்து நின்றாள். அவன் தலை நிமிர்ந்து பார்த்தான். அவள் கண்கள் கலங்கி இருந்தன. முகம் வாட்டமடைந் திருந்தது. அவள் தழுதழுத்த குரலில், "அம்மாஞ்சி! என்னைக் கல்யாணம் செய்து கொள்வதாக நீ திடமாக நிச்சயித்து விட்டாயா......!" என்று கேட்டாள்.

அவன் ஒரு பெருமூச்சு விட்டுக் கொண்டே, "இந்தத் தர்ம சங்கடமான நிலைமையிலிருந்து எப்படி மீளலாம் என்றுதான் யோசித்துக் கொண்டிருக்கிறேன்......" என்றான்.

அவள் சிறிது நேரம் மௌனமாக நின்று கொண்டிருந்து விட்டு, "என்னிடம் உனக்குப் பிரியம்தானே!" என்று கேட்டாள்.

"உன்மீது பிரியம்தான். ஆனால் உன்னைக் கல்யாணம் செய்து கொள்ள வேண்டு மென்று இப்பொழுது பிரியப்படவில்லை. ஆனால் உன்னிடம் எனக்குத் துளிக் கூட வெறுப்புக் கிடையாது......" என்றான் ராமமூர்த்தி.

"அப்படி யென்றால் என்னைக் கல்யாணம் செய்து கொள்ள வேண்டுமென்ற நிர்ப்பந்தம் அதிகமாகிவிட்டால் என்ன செய்வாய்!"

"என்ன செய்வது! நிர்ப்பந்தம் அதிகமானால் கட்டுப்பட்டுத்தானே ஆகவேண்டும்!"

"கட்டுப்பட்டுத்தான் ஆகவேண்டுமா!...... ஆமாம்; ஏனென்றால் அத்தையின் வார்த்தையை உன்னால் தட்ட முடியாது. இல்



லையா......!'' என்றாள் பார்வதி. அவள் வார்த்தையில் ஏளனம் கலந்திருந்தது.

''அத்தையின் வார்த்தையைத் தட்ட முடியாது என்பதல்ல. உனக்கு ஒரு வழி வேண்டாமா......!'' என்றான் ராமமூர்த்தி பச்சாத்தாபத்தோடு பார்வதியின் முகத்தைப் பார்த்துக் கொண்டே.

''எனக்கு ஒரு வழி ஏற்பட்டு விடும். நான் உன்னை நம்பி இருக்கவில்லை, அம்மாஞ்சி! ஆனால் உன்னை நம்பி இருந்த லலிதாவுக்கு நீ என்ன வழி சொல்லப் போகிறாய்!'' என்று பார்வதி கண்டிப்பான குரலில் கேட்டாள்.

ராமமூர்த்தி ஒன்றும் பதில் பேசவில்லை. மௌனமாக நின்று கொண்டிருந்தான்.

''நான் உன்னைக் கல்யாணம் செய்துகொள்ள வேண்டுமென்று சொப்பனத்திலும் நினைக்கவில்லை. நீ இந்த ஊருக்கு வந்ததிலிருந்து லலிதாவுக்கு உன்னைக் காட்டி அவள் மனத்தில் ஒரு நம்பிக்கையை ஏற்படுத்திவிட்டேன். பாவம்! அவளும் உன்னைப் பூரணமாக நம்பிவிட்டாள். எப்பொழுதும் உன்னுடைய தியானம் தான் அவளுக்கு. எனக்காகப் பேசப்பட்ட வரனுக்குத் தடை ஏற்பட்டவுடன் அம்மா செய்த அவசர ஏற்பாட்டினால் அவள் மனம் இடிந்து போய்விட்டாள். இப்பொழுது லலிதாவுக்குப் பயித்தியமே பிடித்துவிடும் போலிருக்கிறது. நானே உன்னை ஏதோ பொடி வைத்து மயக்கி விட்டேனோ என்று அவளுக்கு என் மீது சந்தேகம். நானே உன்னைக் கல்யாணம் செய்து கொள்ள வேண்டுமென்ற ஆசையில் அவளை வஞ்சித்து விட்டேன் என்று எண்ணுகிறாள். இதெல்லாம் எனக்குத்தான் தெரியும். பாவம்! அவளுடைய தவறான அபிப்பிராயத்தை மாற்ற நான் எவ்வளவோ சிரமப்பட்டேன். அம்மாஞ்சி! அவளை நீ கை விட்டு விட்டால் கட்டாயம் அவள் உயிரை விட்டு விடுவாள். உன்னையே நம்பி இருக்கும் அவளை நீ கைவிட்டு விட்டு என்னைக் கல்யாணம் செய்து கொள்வதில் பழி சேருமே தவிர, பலன் ஒன்றும் இருக்காது. அந்தப் பாவத்தை ஏற்றுக்கொள்ள எனக்குக் கொஞ்சங்கூட இஷ்டமில்லை'' என்று ஆவேசமாகச் சொல்லி முடித்தாள் பார்வதி.

இதைக் கேட்டதும் ராமமூர்த்தியின் இதயம் நடுங்கியது. அவன் பெருமூச்சு விட்டுக்கொண்டே, ''இதற்கென்ன வழி செய்யலாம், பார்வதி! எனக்கும் லலிதாவைக் கல்யாணம் செய்து கொள்வதில் பூரண இஷ்டம்தான்...'' என்றான்.

''அம்மாவின் பயித்தியக்கார யோசனையை வளர விடாமல் தடுக்க ஒரு வழி செய்ய வேண்டும். இல்லாவிட்டால் எல்லாம் விபரீதமாக முடியும். நீயே அம்மாவிடம் சொல்லு. உனக்கு என்னைவிட லலிதாவிடம்தானே அன்பு அதிகம்!'' என்று பார்வதி அவன் முகத்தைப் பார்த்துக் கொண்டே ஆர்வத்துடன் கேட்டாள்.

''சரி! ஆனால்......'' என்று இழுத்தவாறே எதையோ சொல்லத் தயங்கினான் ராமமூர்த்தி.

''ஆனால் என்ன! அத்தையின் தாட்சண்யத்துக்காக நீ எதையும் செய்ய வேண்டாம்....'' என்றாள் பார்வதி.

''நான் யார் தாட்சண்யத்தையும் பார்க்கவில்லை. ஆனால் உனக்குக் கல்யாணமாகாமல்.........'' என்றான் ராமமூர்த்தி.

''எனக்கு என்றைக்காவது ஒரு நாள் கல்யாணம் ஆகாமல் போய்விடாது. என்னைக் கல்யாணம் செய்து கொள்வதற்காகத்தான் நீ பம்பாயிலிருந்து வேகமாக வந்து சேர்ந்தாயோ!'' என்றாள் பார்வதி.

''இல்லை, ஆனால் லலிதாவைக் கல்யாணம் செய்து கொள்ளுவதற்காகவும் நான் வரவில்லையே!'' என்றான் ராமமூர்த்தி.

''அது சரிதான். ஆனால் அவள் உன்னைக் கண்டதும், இத்தனை நாளாக யாருடைய வரவை எதிர்நோக்கித் தவம் கிடந்தாளோ அம்மகாபுருஷர் வந்து விட்டதாகப் புரிப்படைந்திருந்தாள். இது உனக்கு எங்கே தெரியப் போகிறது!'' என்றாள் பார்வதி.

''அப்படியென்றால் அவளுக்கு என் மீது...''

''இன்னும் சந்தேகமா! நீ மாத்திரம் என்னைக் கல்யாணம் செய்து கொண்டால் அவள் கட்டாயம் உயிர் வாழவே மாட்டாள். அவள் குணம் எனக்குத் தெரியும், அம்மாஞ்சி......''

அப்படியென்றால் இதை யெல்லாம் நீயே உன் தாயாரிடம் சொல்லி......'' என்று இழுத்தாள்.

## நாழியாகிறது!



மாப்பிள்ளை :—உம், சட்டுபுட்டுனு முகூர்த்தத்தை முடியுங்கோ. நாழியாயிடுத்து. கிரிக்கட் மாட்சுக்குப் போக வேணும்.

சாஸ்திரிகள் :— இதற்கு மேலே வேகமா என்னாலே செய்ய முடியவில்லை. வேணும்னா நீங்க மாட்சுக்குப் போய்விட்டு வந்து தாலியைக் கட்டிக் கொள்ளுங்கள்!

"நான் சொல்லி விட்டேன். நீ மௌனமாக இருப்பதிலிருந்து உனக்கு என்னைக் கல்யாணம் செய்து கொள்வதில்தான் பூரண இஷ்டம் என்று அம்மா நினைத்துக் கொண்டிருக்கிறாள். அம்மாவின் அபிப்பிராயம் தவறானது என்பதை நீ எப்படியாவது தெளிவாக்கி விடு, போதும்..." என்றாள் பார்வதி.

"சரி! ஆனால் உனக்கு அமைந்த நல்ல வரன் தவறிவிட்டதே என்று எனக்கு ரொம்ப வருத்தம், பார்வதி! உனக்கும் எங்களோடு சேர்ந்து கல்யாணம் நடந்தால் எங்களுக்கு எவ்வளவோ திருப்தியாக இருக்கும்..."

"அதைப் பற்றி நீ கவலைப்படாதே, அம்மாஞ்சி! என்னைப் பற்றி எனக்கு நம்பிக்கை இருக்கிறது. லலிதாவுக்கு நீ அமைந்தது போல் எனக்காக உலகத்தில் ஒருவர் இல்லாமல் போகமாட்டார்..." என்றாள் பார்வதி. அவள் மனதில் நம்பிக்கையும் உறுதியும் இருந்தாலும் வார்த்தைகளில் ஒரு துக்கமும் தளர்ச்சியும் இருக்கத்தான் செய்தது.

★

**வா**சலில் ஒரு குதிரை வண்டி வந்து நின்ற சத்தம் கேட்டு, ராமமூர்த்தி பரபரப்புடன் வாசற்பக்கம் ஓடினான். பார்வதி வாசற்பக்கத்து அறைக்குப் போய் ஜன்னல் வழியாக வெளியே எட்டிப் பார்த்தாள். அப்போது அவள் உள்ளம் தடதடவென்று அடித்துக்கொண்டிருந்தது. யார் வருகிறார்களோ, என்று ஆவலுடன் பார்த்தாள்.

குதிரை வண்டியிலிருந்து ஒரு வாலிபன் இறங்கினான். அந்த வாலிபன் யாரென்று ராமமூர்த்தியால் எளிதில் உணர்ந்து கொள்ள முடிந்தது. பார்வதியும் அவனைப் பார்த்ததும் பரபரப்புடன் உள்ளே ஓடினாள். பார்வதியை எந்த வாலிபன் வந்து பார்த்துக் கல்யாணம் செய்து கொள்ளச் சம்மதித்தானோ, அதே வாலிபன் தான் அவன்!

ராமமூர்த்தி அவனை உபசரித்து உள்ளே அழைத்து வந்தான். அந்த வாலிபன் கூச்சத்துடன் உள்ளே தாழ்வாரத்தில் வந்து அமர்ந்து, "இல்லை......ஒரே ஒரு வார்த்தை! அதைச் சொல்லிவிட்டுப் போகலாமென்று வந்தேன். சங்கரய்யர் இல்லையா...?" என்றான்.

"அவர் எங்கோ வெளியே போயிருக்கிறார். என்னிடம் தான் சொல்லுங்களேன்! நான் அவர் வந்தவுடன் விஷயத்தைச் சொல்லி விடுகிறேன்..." என்றான் ராமமூர்த்தி.

அந்த வாலிபன் சிறிது தயங்கி யோசித்து விட்டு, "வரதட்சணை விஷயமாகக் கனபாடிகள் இங்கே வந்து ஏதோ சொன்னதாகக் கேள்விப்பட்டேன். அது தவறு. கனபாடிகளுக்கு நான் வேறொரு பெண்ணைக் கல்யாணம் செய்து கொள்ள வேண்டுமென்ற அபிப்பிராயம். அதில் அவருக்கு ஏதோ லாபம் இருக்கிறது. அதற்காக அவர் ஏதோ ஆகாத கோரிக்கைகளையெல்லாம் கேட்டிருக்கிறார். எனக்கு அந்தப் பெண்ணைக் கல்யாணம் செய்து கொள்ளும் அபிப்பிராயமேயில்லை. நீங்கள் சங்கரய்யரிடம் சொல்லிவிடுங்கள். எனக்குப் பூரண சம்மதம். நிச்சயமாகிவிட்ட முகூர்த்தத்தை நிறுத்த

## சென்ஸஸ் ஹாஸ்யம்




வேண்டிய அவசியமே இல்லை. நான் போய் வரட்டுமா!" என்று சொல்லி எழுந்தான்.

"ரொம்ப சரி! அவசியம் சொல்லிவிடுகிறேன். கொஞ்சம் காப்பி..." என்று சொல்லிக் கொண்டிருக்கும் போதே அந்த வாலிபன், "வேண்டாம், வேண்டாம்! நான் வருகிறேன். இதை மாத்திரம் மறக்காமல் அவரிடம் சொல்லி விடுங்கள்!" என்று சொல்லிவிட்டுச் சிறிது தயங்கியபடியே சுற்றிலும் தன் கண்ணோட்டத்தை ஒரு தடவை செலுத்தினான். கதவின் மறைவில் நின்றுகொண்டு தலையை மாத்திரம் வெளியே நீட்டிப் பார்த்துக் கொண்டிருந்த பார்வதி சட்டென்று தன் முகத்தை உள்ளே இழுத்துக் கொண்டாள்.

ராமமூர்த்தி அவனை வாசல் வரையில் கொண்டு போய் விட்டுவிட்டு உள்ளே வந்தான். குதிரை வண்டி வீட்டு வாசலிலிருந்து கிளம்பிய ஓசை கேட்டது.

இவ்வளவு நேரம் கதவு மறைவில் நின்று கொண்டிருந்த பார்வதி பரபரப்புடன் வெளியே வந்தாள். அவளுடைய முகத்தில் ஒரு புதிய உவகையும் பிரகாசமும் ஏற்பட்டிருந்தன. அவள் அவசர அவசரமாகத் தன் தலையைச் சரி செய்து கொண்டு வெளியே கிளம்பினாள்.

"எங்கே கிளம்பிவிட்டாய்!" என்றான் ராமமூர்த்தி சிரித்துக் கொண்டே.

"எங்கே போவேன்! லலிதாவின் வீட்டுக்குத்தான்! அவள் உயிர் கொஞ்சம் கொஞ்சமாகப் போய்க் கொண்டிருக்கிறதே! அவளுக்கு இந்தச் சமாசாரம் சஞ்சீவி மருந்து போலிருக்காதா...!" என்று சொல்லிக் கொண்டே அவசர அவசரமாக வெளியே போனாள்.

# மத்திய கேந்திரம்

ஜெயமணி

## ஆப்கானிஸ்தான்—2

சூழ்ச்சி காரணமாக வெகு சீக்கிரத்தில் அமீர் நஸருல்லாவும் சிம்மாசனத்தைத் துறக்க நேர்ந்தது. பிறகு, கொலையுண்ட அமீர் ஹபீபுல்லாவின் இளைய குமாரரான அமானுல்லா கான் 1919-ம் வருஷம் பட்டத்துக்கு வந்தார்.

அமீர் அமானுல்லா பட்டத்துக்கு வந்த பின் யாரும் எதிர்பாராத ஆச்சரியமான சம்பவம் ஒன்று நிகழ்ந்தது. அதாவது முதலாவது உலக மகா யுத்தத்தில் வெற்றிபெற்ற பிரிட்டிஷாரை எதிர்த்து அமீர் அமானுல்லா போரை ஆரம்பித்தார்! மிகுந்த வல்லமை பொருந்திய பிரிட்டிஷாரின் ஆதிக்கத்தில் இருந்த இந்தியா மீது படையெடுக்கத் துணிந்தார்.

ஆப்கானிஸ்தான் சம்பந்தமான விஷயங்களில் பிரிட்டிஷார் தலையிடுவதை அவர் விரும்பவில்லை. ஆப்கானிஸ்தான் பிரிட்டிஷாரின் தயவில் இருக்க நேர்ந்தது அவருக்கு ஆத்திரத்தை உண்டாக்கியது. எனவே பிறர் தலையீட்டை ஒழித்துத் தமது நாட்டின் சுதந்திரத்தை நிலைநிறுத்துவதற்காக அமீர் அமானுல்லா போர் தொடுத்ததைக் கண்டு ஆசியா நாடுகள் மகிழ்ச்சியடைந்தன. குறிப்பாக, பிரிட்டிஷாருடன் தீவிரமான சுதந்திரப் போர் தொடுக்கும் தறுவாயில் இருந்த இந்தியா அமீர் அமானுல்லாவின் தைரியத்தை மிகப் பாராட்டி, அவரது முயற்சியில் அனுதாபம் காட்டியது.

அமானுல்லா தமது பலத்தை அறிந்து கொள்ளாமல் கண்மூடித்தனமாக இந்தியா மீது படையெடுக்கவில்லை.

முதலாவது மகாயுத்தம் முடிந்ததும் தங்களுக்குச் சுதந்திரம் கிடைக்கும் என்று இந்திய மகாஜனங்கள் நம்பிக் கொண்டிருந்தனர். ஆனால் அந்த நம்பிக்கை வீணாகியது. எனவே, இந்தியா முழுதும் ஜனங்களிடையே அதிருப்தியும் ஆத்திரமும் உண்டாயின. பாஞ்சாலத்தில் இராணுவச் சட்டம் தாண்டவமாடியது. கிலாபத் பிரச்னை சம்பந்தமாக முஸ்லிம்களும் பிரிட்டிஷார்மீது அதிருப்திகொண்டு கிளர்ச்சி செய்யத் தொடங்கினர். எனவே, மேற்படி நிலைமையைத் தமக்குச் சாதகமாக்கிக் கொள்ளும் நோக்கத்துடனேயே அமீர் அமானுல்லா துணிச்சலுடன் பிரிட்டிஷாரை எதிர்த்துப் போரை ஆரம்பித்தார்.

அதே சமயத்தில், அமானுல்லா இந்தியா மீது படையெடுத்ததைக் காட்டிலும் அதிக ஆச்சரியமான சம்பவம் ஒன்றும் நிகழ்ந்தது. அப்போது ஆப்கானிஸ்தானத்தைவிட பிரிட்டிஷ் இந்தியா எத்தனையோ மடங்கு அதிக பலம் பொருந்தியதாக விளங்கியது. அப்படியிருந்தும் பிரிட்டிஷார் அமானுல்லாவை எதிர்த்து நிற்க விரும்பவில்லை. எதிர்த்து நிற்பதன் மூலம் போரை நீடிக்கவிட்டால் புதிய பிரச்னைகள் எழக்கூடும் என்று அவர்கள் கருதினர். அமானுல்லா ருஷ்யத் தலைவர் லெனினுடன் தொடர்பு வைத்துக் கொண்டிருந்ததும் பிரிட்டிஷாருக்குக் கலக்கத்தைக் கொடுத்தது. எனவே அவர்கள் சிறிதும் தாமதிக்காமல் ஆப்கானிஸ்தானத்தின் சுதந்திரத்தை அங்கீகரித்து அமானுல்லாவுடன் சமாதானம் செய்து கொண்டனர். அதுவரையில் பிரிட்டிஷாரின் நிர்வாகத்தில் இருந்த ஆப்கன் வெளிநாட்டு விவகாரங்கள் சுதந்திரம் பெற்ற ஆப்கானிஸ்தானின் நிர்வாகத்திலேயே முற்றிலும் விடப்பட்டன.




அவ்விதமாக அமீர் அமானுல்லா ஆச்சரியகரமான வெற்றிபெற்றார். பிரிட்டிஷாரைப் பணியவைத்த அவரது கீர்த்தி உலகம் முழுதும் பரவியது. ஆனால் அந்தக் கீர்த்திக்கு அவர் கொடுத்த விலை அற்பசொற்பமானதல்ல. அது இறுதியில் அவரது முடிக்கே ஆபத்தாக முடிந்தது!

தங்களை அமீர் அமானுல்லா பணியவைத்தது பிரிட்டிஷாருக்கு உள்ளூற மனக் கொதிப்பை உண்டாக்கியது. அதன் விளைவு என்ன? அமீர் அமானுல்லா அரசியல் சூழ்ச்சியிலும் ராஜ தந்திரத்திலும் கை தேர்ந்த பிரிட்டிஷாரின் சலுகையையும் ஆதரவையும் அடியோடு இழந்தார்.

* * *



அமீர் அமானுல்லாவும் ராணி சூரையாவும்

ஒரு புறம் பிரிட்டிஷாரின் ஆதரவை இழந்த அமானுல்லா, மற்றொருபுறம் ஆப்கன் மக்களின் ஆதரவையும் முஸ்லிம் நாடுகளின் ஆதரவையும் இழப்பதற்கான காரியங்களில் ஈடுபட்டதுதான் துரதிர்ஷ்டமாகும்.

பிரிட்டிஷார் மீது போர் தொடுத்து வெற்றி பெற்றதால், ஆப்கன் மக்களுக்கு அவர் மீது மிகுந்த மதிப்பு ஏற்பட்டது. எனினும் பிறகு அமானுல்லா கைக்கொண்ட நடவடிக்கைகளை மக்கள் வெறுக்க முற்பட்டார்கள். அமானுல்லா ஆப்கானிஸ்தானின் நலனுக்குக் கூர்தகம் ஏற்படும்படியாக எதுவும் செய்துவிடவில்லை. ஐரோப்பிய நாடுகளைப் பின்பற்றிச் சில புரட்சிகரமான சீர்திருத்தங்களை அமுலுக்குக் கொண்டுவரலானார். பண்டைய நாகரிகத்திலும் புராதனப் பழக்க வழக்கங்களிலும் ஆழ்ந்து கிடந்த ஜனங்களிடையே அவர் நிதானமின்றி அவசரப்பட்டுச் சீர்திருத்தங்களை அமுலுக்குக் கொண்டுவர முற்பட்டதுதான் பெரும் அனர்த்தமாக முடிந்தது.

மேற்படி முயற்சியில் அமீர் அமானுல்லாவின் மனைவி ராணி சூரையாவும் அவருக்கு உதவியாக இருந்தது ஜனங்களின் ஆத்திரத்தை இன்னும் அதிகப்படுத்தியது. ராணி சூரையா ஐரோப்பாவில் படித்தவராதலால், 'பர்தா'வை அதாவது பெண்கள் முக மூடி போட்டுக் கொள்வதை அவர் அறவே வெறுத்தார்.

துருக்கியில் மேல்நாட்டைப் பின்பற்றி பல சீர்திருத்தங்களை அமுலுக்குக் கொண்டு வந்த கெமால் பாஷாவைப் போல், அமானுல்லாவும் செய்யத் தொடங்கினார். ஆப்கானியர்கள் கர்நாடகமான உடைகளைக் களைந்தெறிந்து விட்டு ஐரோப்பியர்களைப் போல் கால்சட்டை, மேல்சட்டை, தொப்பி முதலியன அணிந்து கொள்ளும்படி வற்புறுத்தினார். எல்லோரும் தாடிகளை எடுத்துவிட வேண்டும் என்று கட்டளை யிட்டார்.

எனினும் துருக்கியில் கெமால் பாஷா வெற்றியடைந்தது போல், ஆப்கானிஸ்தானில் அமானுல்லா வெற்றி அடைய முடியவில்லை. அதற்குக் காரணங்கள் பல. கெமால் பாஷாவைப்போல் அமானுல்லா மிகுந்த திறமையும் ராஜதந்திரமும் வாய்க்கப் பெற்றவர் அல்ல. கெமால் பாஷா தமது நிலைமையை யாரும் அசைக்க முடியாதவாறு பலப்படுத்திக் கொண்ட பின்தான் சீர்திருத்தங்களை அமுலுக்குக் கொண்டு வருவதில் ஈடுபட்டார். துருக்கி இராணுவமும் கெமால் பாஷாவுக்குப பக்கபலமாக இருந்தது. ஆனால் அமானுல்லா அத்தகைய முன்னேற்பாடுகளைச்செய்து கொள்ளாமல் அவசரப்பட்டுப் புரட்சிகரமான சீர்திருத்தங்களில் ஈடுபட்டதே மகத்தான தவறாக முடிந்தது.

* * *

அமீர் அமானுல்லாவின் முயற்சியினால் சுதந்திரம் பெற்ற ஆப்கானிஸ்தானின் அரசியல் நிர்வாகச் சக்கரம் எல்லை மீறி வேகமாகச் சுழலத் தொடங்கியது. ஏராளமான ஆப்கன் சிறுவர்களும் சிறுமிகளும் கல்வி பயிலுவதற்காக ஐரோப்பாவுக்கு அனுப்பப் பட்டனர். சர்க்கார் நிர்வாகத்திலும் அமானுல்லா தீவிரமான சீர்திருத்தங்களைச் செய்ய முற்பட்டார். ருஷ்யா, பாரசீகம், துருக்கி முதலிய பல நாடுகளுடன் உடன்படிக்கைகள் செய்து கொண்டார். சீனு முதலிய பல நாடுகளுடன் நட்பையும் நல்லுறவையும ஏற்படுத்திக் கொண்டார்.

# நெஞ்சு பொறுக்குதில்லை

## வேணுவின் புலம்பல்

"நமக்குச் சுயராஜ்யம் கிடைத்திருக்கிறது. அந்நிய ஆட்சியில் நமது ஜனங்கள் எவ்வளவு கஷ்டப்பட்டிருக்கிறார்கள்! அதற்கெல்லாம் பரிகாரம் காண வேண்டாமா! கிராமங்களை முன்னுக்குக் கொண்டுவர வேண்டாமா! கால்நடைகளை அபிவிருத்தி செய்ய வேண்டாமா! அவைகளுக்கு மேய்ச்சல் தரை ஏற்படுத்த வேண்டாமா! குளங்கள், மேடிட்டுக் கிடக்கின்றனவே, அவைகளைப் பள்ளமாக்க வேண்டாமா! ஜனங்களின் துணிப் பஞ்சத்தைப் போக்க வேண்டாமா! இவைகளை எல்லாம் செய்வதற்கு அதிகாரிகள் எவ்வளவு இருந்தாலும் சரியாயிருக்குமே! அப்படியிருக்க சர்க்காரைக் குறை சொல்லிக் கொண்டிருக்கிறார்களே. இது நியாயமா!" என்று சிலர் சொல்கிறார்கள். ஆனால்......

ஒரு அணைக் கட்டில் இரு கால்வாய்கள். ஒரு கால்வாயில் 9000 ஏக்கரும் மற்றொரு கால்வாயில் 13000 ஏக்கரும் நெல் விளைச்சல் உண்டு. இருபோகம். இரு கால்வாய்களிலும் ஏராளமான குளங்கள். குளங்களுக்கு மராமத்து எஸ்டிமேட் போடவேண்டும். நீர்ப் பாசன மடைகளைக் கவனிக்கவேண்டும். கரைகளைப் பாதுகாக்கவேண்டும். தண்ணீர்த் தட்டுக் காலத்தில் ரெகுலேஷனைக் கண்காணிக்க வேண்டும். மரங்களை ஏலம்போட்டுச் சர்க்காருக்குப் பணம் தேடித் தரவேண்டும். மராமத்து வேலையும் பார்த்துக் கொள்ளவேண்டும். இந்த இரு கால்வாய்க்கும் இரு ஓவர்சியர்கள் இருப்பது வழக்கம். 1946-ல் ஒரு உதவி என்ஜினீயர் அந்தப் பிரதேசத்துக்கு வந்தார். சர்க்காரில் ஓவர்சியர் பஞ்சம் அந்தக் காலத்தில் ஏற்பட்டது. அந்த இன்ஜினீயர் இந்த இரு கால்வாய்களையும் ஒரு ஓவர்சியருக்கு மாற்றி வேலை பார்க்கச் சொன்னார். அப்படி 4 வருடம் அந்த இன்ஜினீயர் அந்தப் பக்கம் இருந்தவரை அப்படியே நடந்தது. ஒரு ஓவர்சியரின் சம்பளம் சர்க்காருக்கு மிச்சம். இரு கால்வாய்க்கும் வழக்கமான சண்டைகள் ரயத்துகளுக்குள் ஏற்படுவது நின்றது. இந்தக் கிழமை இந்த இடத்திற்குச் சென்று ஓவர்சியரைப் பார்த்தால் நமது காரியம் முடியும் என்பதாக ரயத்துகளுக்குத் தெரியும். லஸ்கர்கள் சுறுசுறுப்பாக லயன் கரையில் சுற்றி வந்தார்கள். பார்க்கப்போனால் அந்தச் சமயத்தில் வருணபகவான் ஸ்டிட்ரைக் செய்திருந்தார். வெள்ளாமை சங்கடத்தில் இருந்தது. இருந்தாலும் அந்த 4 வருடத்தில் நடந்த நிர்வாகத்தை மெச்சாதவர்கள் அந்தப் பிரதேசத்தில் கிடையாது. எப்படி இது சாத்தியமாயிற்று! இதற்குக் காரணம் உற்சாகமும் கடமை புணர்ச்சியுந்தான் — இல்லையா!

கொஞ்ச நாளைக்கு முன்னால் கால்நடை இலாகா அதிகாரி ஒருவர் கால்சூட் கைசூட் போட்டுக்கொண்டு ஒரு கிராமத்துக்கு வந்தார். அந்தப் பக்கத்தில் கொள் முதல் கொடுமை தலை தூக்கியிருந்த நேரம் அது. யாரோ 'சப்ளை ஆபீஸ் தெய்வம்' தான் வந்திருக்கிறது என்று பயந்து எல்லாரும் ஒளிந்து கொண்டார்கள். கிராம முனிசீபின் கடுமையான முயற்சியின்பேரில் ஒரு சிலர் வெளியில் வந்தார்கள். கால்நடை அதிகாரி பிரசங்கம் செய்தார். சீமையில் வளரும் பசுக்கள், நமது நாட்டில் பொலி காளைகளின் தேவை, கிராம மக்கள் பசுக்களையும் எருதுகளையும் எப்படித் தீனி வைத்து வளர்க்கவேண்டும் என்பதற்குப் பட்டியல்—ஆகியவற்றைப் பற்றிச் சாங்கோபாங்கமாகச் சொன்னார். கூடியிருந்தவர்களில் ஒரு பிரஹஸ்பதி ஒரு விண்ணப்பம் செய்தார். அதாவது கால்நடைகளுக்கு மேய்ச்சல் பூமி இல்லை யென்றும் கிராமத்துக்கு மேற்கே சுமார் 100 ஏக்கர் வரை தரிசாக—பரம்பாக— கிடக்கிறது என்றும் அவைகளைச் சர்க்கார் எடுத்துக்கொண்டு காடு உண்டாக்கினால் அதற்கான செலவைக் கிராம மக்கள் தரத் தயாராக இருப்பதாகவும், மேற்படி பூமியில் பாதிக்கு மேல் சர்க்கார் நிலம்தான் என்றும் தெரிவித்தார். வந்த அதிகாரிக்குச் சப்பென்று போய் விட்டது. "அது என்னால் ஆகக்கூடியது அன்று. மேலே எழுதுங்கள்" என்றார். மேல் அதிகாரிக்கு எழுதினார்கள். அவர் வந்து பார்த்தார். அவர் என்ன சொன்னார் என்று தெரியுமா! 'நீங்கள் கேட்கிறது நல்ல விஷயம்தான். இருந்தாலும் இதில் சர்க்கார் செய்யக்கூடியது ஒன்றுமில்லை. நீங்களே கூட்டு முயற்சி செய்து பாருங்கள்' என்று சொல்லிவிட்டுப் போனார். இப்படிச் சொல்ல அந்த அதிகாரி இங்கே முகாம் செய்ய வேண்டுமா! மாடுகளை வளர்க்கப் பிரசங்கம் செய்யவென்று தாலுகாவுக்கு ஒரு அதிகாரியா! நகரங்களிலே காப்பி கிளப் இருந்து வருவதும் பெருகி வருவதுமே கிராம மக்களில் பால் மாடு வளர்வதற்கும் பெருகுவதற்கும் ஒரு ஊக்க மாயிற்றே! இதற்கு அதிகாரி என்று ஒன்று வேண்டுமா!

சந்தேகமில்லாமல் அதிகாரக் கூட்டம் ஜாஸ்திதான். யாரை ஜாஸ்தி போடவேண்டுமோ அவர்களைப் போடவேண்டும், யாரைக் குறைக்க வேண்டுமோ அவர்களைக் குறைக்க வேண்டும். விவசாய டிபார்ட்மெண்டில் கெஜடட் அதிகாரிகளைக் கூட்டுகிறார்கள். உரம் சப்ளை ஆபீஸர், விதை பார்க்கும் ஆபீஸர், (ஸீட் டெவலப்மெண்ட் ஆபீஸர்) டிமான்ஸ்டிரேட்டர்கள், பீல்ட்மேன்கள் இப்படிக் கூட்டுகிறார்கள். மேஸ்திரிகளைக் குறைக்கிறார்கள். மேஸ்திரிக்குச் சம்பளம் 50 ரூபாய். ஆபீஸருக்குச் சம்பளம் 200 ரூபாய். மேஸ்திரிகளை மேய்த்துக் கட்டுவதும் விவசாயிகளுக்கு உபதேசம் செய்வதும் ஆபீஸரின் வேலை. இதற்கு என்ன அவசியம்! விவசாயியின் பயிர்களுக்கு நோய் விழுந்தால் அதற்கு எப்படி மருந்து தெளிக்க வேண்டும் என்று சொல்பவன் மேஸ்திரி. உரக் குழிகளை எப்படி மூடிவைக்க வேண்டும் என்று சொல்பவன் மேஸ்திரி. விதையைக் காயப் போடுவதில் ஒத்தாசை செய்பவன்

மேஸ்திரி. நிலைமை இப்படியிருக்க அதிகாரிகள் கூட்டத்தையும் ஆபீஸர்கள் கூட்டத்தையும் பெருக்குவானேன் !

ஜில்லாவுக்கு ஹரிஜன அபிவிருத்திக்கு ஒரு டிபுடி கலெக்டர் இருக்கிறார். தங்களைத் துன்பப்படுத்தியதாக ஹரிஜனங்கள் அவருக்கு மனுப் போடலாம். அதை அவர் தாசில்தாருக்கு விசாரணைக்கு அனுப்புவார். கதர் அணிந்த ஹரிஜன பக்தர்கள் (வெட்கமாக இருக்கிறது) திடீரென்று ஹாஸ்டல்களை ஆரம்பிப்பதாக அவருக்கு எழுதுவார்கள். ஹாஸ்டல் இடமும் அதில் இருக்கும் பிள்ளைகளும் இந்தியா முழுவதும் தேடினாலும் அகப்படா. இருந்தாலும் ஹாஸ்டல் வருஷக் கணக்காக நடப்பதாகவும் மான்யம் வேண்டுமென்றும் மனுப் போடுவார்கள். அந்த மனுவுக்குப் பரிகாரம் அந்த அந்த ஆபீஸரின் நேர்மையைப் பொறுத்தது. இவை போக, பிற்பட்ட வகுப்புகளிலிருந்து, படித்துவிட்டு வேலையில்லாமல் இருந்தால் அவரிடம் வேலைக்கு வரலாம். எல்லாவற்றிலும் அதிகமாக அந்த ஜில்லாவில் எந்த ஹரிஜனக் கூட்டமும் விழாவும் அவர் தலைமையில்தான் நடந்து ஆகவேண்டும். இத்யாதி காரியாதிகளைக் கவனிப்பதற்கு 450 ரூபாய் சம்பளம் வாங்கும் உத்தியோகஸ்தர் வேண்டுமா ! அவருக்குக் கீழ் ரெவின்யூ இன்ஸ்பெக்டர் கிரேடில் ஒன்றிரண்டு ஆபீஸர்கள், ப்யூன்கள், காரியாலயக் குமாஸ்தாக்கள் வேண்டுமா !

இது அபிவிருத்தியில் மற்றொரு கட்டம். நெஞ்சு பொறுக்கிறதா !

ரோடு போடப் பணமில்லை. அணைகட்டப் பணமில்லை. ஆஸ்பத்திரி திறக்கப் பணமில்லை. பள்ளிக்கூடம் வைக்கப் பணமில்லை. ஆனால் உப்புக்கு வரி. கற்பூரத்துக்கு வரி. உட்கார்ந்தால் வரி. நிமிர்ந்தால் வரி. ஒவ்வொரு குடித்தனக்காரனும் தான் செலவழிக்கும் ரூபாய்க்குக் குறைந்த பட்சம் காலணா சர்க்காருக்கு வரி கொடுக்கிறான். அப்படியிருந்தும் பணம் போதவில்லை. எப்படிப் போதும், இப்படிக் கூடிக் கொம்மாள மடித்தால் ! ஒரு கிராமத்துக்கு, ஒரு கி.மு. ஒரு கர்ணம், இரண்டு தலையாரிகள், மூன்று வெட்டியான்கள். 10—15 கிராமங்கள் சேர்ந்த ஒரு பிர்க்காவுக்கு ஒரு ரெவின்யூ இன்ஸ்பெக்டர், ஒரு ப்யூன்—இப்படி ஐந்து இன்ஸ்பெக்டர்களுக்குமேல் ஒரு தாசில்தார். அவருக்குக் கீழே ரூ. 100 சம்பளத்தில் பண வரவு செலவுக்கு ஒரு ஆபீஸர். ரூ. 80 சம்பளத்தில் நிர்வாகக் காரியத்துக்கு ஒரு அதிகாரி. இவர்களுக்குக் கீழே 15, 20 குமாஸ்தாக்கள், 20, 25 ப்யூன்கள், ப்ராஸஸர்கள் டபேதார் ஆகியோர். இவர்களைக் கண்காணிக்க இரு தாலுகா (தற்சமயம் 2½ தாலுகா)வுக்கு ஒரு கெஜடெட் உத்தியோகஸ்தர். இதற்கு மேலே கலெக்டர். சொல்லப்போனால் கலெக்டருக்கும் தாசில்தாருக்கும் நடுவில் ஒரு ஆபீஸரே தற்சமயம் அவசியமில்லை. நீதி இலாகா இருந்தபொழுது அந்தப் பதவிக்குப் பொருள் இருந்தது.

மூன்று ஜில்லாவுக்கு என்று எண்ணுகிறேன். ஒரு அதிகாரி ரூ. 400 சம்பளம்.



பையன்:—என்னப்பா! க்ஷவரம் பண்ணிக்க 'ஸலூனு'க்குத்தானே அப்பா போறே இப்போ !

தகப்பனார்:—ஏண்டா அபசகுனமே ! 'ரேஸ் கோர்ஸு'க்குக் கிளம்பிக் கொண்டிருக்கிறபோது இப்படிச் சொல்லித் தொலைக்கிருயேடா !

பையன்;—அங்கேயும் க்ஷவரம் பண்ணுகிறார்களாமே, அப்பா !

---

கெஜடட் அதிகாரி. டெபுடி கலெக்டர் ஸ்கேல். அவருக்குப் பெயர் என்ன தெரியுமா ! எபிஷென்ஸி ஆபீஸர் - திறமையான அதிகாரி. அவர் என்ன செய்யவேண்டும் ! கிராமந்தோறும் வந்து உரம் எவ்வளவு வாங்கப்பட்டிருக்கிறது, நெல் பயிரில் எவ்வளவு போடப்பட்டிருக்கிறது என்று கண்காணிக்க வேண்டும். அத்துடன் கிணறுகளைப் பார்த்து ஜலம் இருக்கிறதா, சர்க்கார் ஸ்கீமில் கட்டப்பட்டது தானா என்று பார்க்கவேண்டும். எப்படிப் பார்ப்பது ! எல்லாம் இந்த கி. மு. கர்ணம் தாசில்தார் முதலானவர்களைக் கூட்டிக் கொண்டுதான். ஒரு நாளைக்கு 100 கிராமம் அடங்கிய ஒரு தாலுகா முழுதும். இது 1950-ல் உற்பத்தியான பதவி.

நெஞ்சே ஏன் பதறுகிருய் !

இப்படியெல்லாம் செய்யாமலிருந்தால் ஜில்லாவுக்கு லக்ஷம் ரூபாய்க்குமேல் மீதமாகும். இது யாருக்குத் தான் தெரியாது ! பின் ஏன் இது நாள்வரை செய்யவில்லை ! வேலையில்லாத் திண்டாட்டம் வந்து விடும் என்ற பயமா !

வருடா வருடம் 50,000 பிள்ளைகள் பாஸ் செய்து வருகிறார்களே, அவர்கள் அடுத்த வருடத்தில் வேலையில்லாமல் தானே திண்டாடுவார்கள் ! அவர்களுக்கு எந்த சர்க்கார் இலாகா புதிதாகத் திறக்கப்படவிருக்கிறது ! ஆபீஸர்கள் கோட்டையில் இருந்து கொண்டு இப்படிச் செய்தால் நிர்வாகம் நடைபெறாது என்று சொல்கிறார்களா ! அதை நமது மந்திரிகள் வேதவாக்கு என்று சொல்கிறார்களா ! இதை யெண்ணிப் பார்க்கும்போது, 'இந்த நிலை கெட்ட மனிதரை நினைந்துவிட்டால் நெஞ்சு பொறுக்குதிலையே !' என்றுதான் சொல்லத் தோன்றுகிறது.

# எல்லாம் நன்மைக்கே!

நா. ராமச்சந்திரன்

பெரிய வீட்டிலுள்ள ஒரு சிறிய பகுதியை வாடகைக்கு எடுத்துக் கொண்டு, நடராஜனும் அவன் தாயாரும் வசித்து வந்தார்கள். தந்தையை இழந்து விட்ட அவனுக்குத் தாயாரைக் காப்பாற்ற வேண்டிய பொறுப்பு ஏற்பட்டிருந்தது.

அவனுடைய தாயாருக்கோ தேக நிலை அப்போது சரியாக இல்லை. எமனுடன் போராடிக் கொண்டிருந்தாள். நடராஜனுக்குக் கல்யாணம் செய்து கண் குளிரப் பார்த்த பிறகுதான் உயிரை விட வேண்டும் என்று திடமான உள்ளத்துடன் உயிரைக் கையில் பிடித்துக் கொண்டிருந்தாள். ஆனால் எமன் அவள் ஆசையில் மண்ணைப் போட்டு அவளை ஏமாற்றி விட்டான்.

நடராஜன் அப்போது ஒரு பாங்கியில் குமாஸ்தா வேலையில் சொற்ப சம்பளம் வாங்கிக் கொண்டிருந்தான். தாயாருடன் கூட வசித்து வந்தபோதே வாங்கும் சம்பளம் குடும்ப வரவு செலவுக்குக் கட்டி வரவில்லை. கல்யாணம் செய்து கொண்டு விட்டால் கஷ்டப் பட வேண்டியதுதான் என்ற எண்ணத்தில் கல்யாணத்தை ஒத்திப் போட்டுக் கொண்டு வந்தான்.

நடராஜனின் உத்தரவு பெற்றுக் கொண்டா அவனுடைய தாயார் மேலுலகத்திற்குப் பிரயாணமானாள்? அதுபோலத்தான் அவனுடைய எண்ணத்திற்கு மாறாக அவனுக்கு ஒரு வரன் நிச்சயமாயிற்று.

அவனுடைய தூர உறவினரான ஒருவர் தம்முடைய நண்பருக்குப் பெண் ஒருத்தி இருக்கிறாள் என்று நடராஜனைப் பெண் பார்க்க ஒரு நாள் அழைத்துப் போனார்.

எப்படியும் அதைத் தட்டிக் கழித்துவிட வேண்டும் என்று நடராஜன் நிர்மானித்துக் கொண்டான். தான் சொல்லி விட்டால் யார் தன்னை நிர்ப்பந்தப்படுத்த முடியும் என்பது அவன் எண்ணம்.

ஹாலில் போய் உட்கார்ந்தவுடன் கமலா வந்தாள். எல்லோருக்கும் நமஸ்காரம்செய்து விட்டு உள்ளே போய் விட்டாள். சாதாரணமாகப் பெண்களுக்கு அந்தச் சந்தர்ப்பத்தில் ஏற்படும் மிருதுவான நாணம் அவளுக்கு அப்போது ஏற்படவில்லை. அவள் முகம் 'குப்'பென்று சிவந்து போகவில்லை. நடராஜனைப் பார்த்தவுடன் அவளுடைய மனத்திலே விவரிக்க முடியாத உணர்ச்சிகள் ஒன்றும் எழவில்லை. சாதாரணமாகத்தான் வந்தாள். சாதாரணமாகத்தான் போனாள்.

நடராஜன் அவள் தன்னருகே வரும் போது உற்று கவனித்தான். ஏனெனில் கல்யாணம் பண்ணிக் கொள்ளப் போவது அவனல்லவா? முதலில் அவள் முகத்தைப் பார்த்தான். அவள் உடுத்தியிருந்த அரக்குக் கரைப் புடவையும் சந்தனக் கலர் ரவிக்கையும் அவன் மனத்தைக் கவர்ந்தன.

"அடடா! அம்மா இல்லையே!" என்று ஒரு கணம் நினைத்துக் கொண்டான். சகஜமாக இது மனத்திலே தோன்றும் விஷயமே. ஆனாலும் அது அவன் உள்ளக் கிளர்ச்சியை எவ்வளவு தூரம் தூண்டியிருக்கிறது என்பதை அரை விநாடியில் அவன் முக விலாசம் தெள்ளத் தெளிவாக எடுத்துக் காட்டிற்று.

சற்று நேரம் கழித்துக் கல்யாணப் பேச்சு ஆரம்பமாயிற்று. முதலில் பெண்ணின் தகப்பனார் பேச ஆரம்பித்தார், "கல்யாணத்தை இந்த மாதத்திலேயே முடித்து விட்டால் தேவலை. அடுத்த மாதம் முதல் தேதியிலிருந்து அவளுக்குக் குபேரா பாங்கியில் 'டைபிஸ்ட்' வேலை ஆகியிருக்கிறது. அதற்குள் கல்யாணத்தை முடித்து விட வேண்டும் என்பது என் விருப்பம்" என்று சொல்லி அவர் நடராஜனைப் பார்த்துக் கொண்டே, "உங்களுக்கு இதில் ஆட்சேபம் ஒன்றும் இருக்காது என்று நினைக்கிறேன்" என்றார்.

நடராஜனுக்கு அவர் சொன்னதைக் கேட்டவுடன் உள்ளம் குளிர்ந்தது. 'நம்முடைய வருவாய் போதாததால்தானே கல்யாணம் செய்து கொள்ளத் தயங்கினோம்? இப்போது அவளும் சம்பாதிக்கப் போகிறாள். கஷ்டமே இல்லை. சௌக்கியமாக இருக்கலாம்' என்று நினைத்துக் கொண்டான். ஆகவே சம்மதம் தெரிவித்து விட்டான்.

★

நடராஜனுக்கும், கமலாவுக்கும் கல்யாணம் விமரிசையாக நடைபெற்றது. கல்யாணமான ஒரு மாதத்தில் ஜார்ஜ் டவுனில் ஒரு தெருவில் தனிக் குடித்தனம் போட்டுக் கொண்டான் நடராஜன். கமலாவின் பாங்கி அவள் வீட்டுக்குப் பக்கத்திலேயே இருந்தது. நடராஜன் வேலை பார்த்து வந்த

பாங்கியோ மவுண்ட் ரோடில் இருந்தது. சமைத்துப் போடவும் மற்றக் குடும்பக் காரியங்களைக் கவனிக்கவும் கமலாவின் அத்தை வீட்டோடு வந்திருந்தாள்.

காலையில் இருவரும் ஒன்ருகச் சாப்பிடுவார்கள். பிறகு வாடகை ரிக்ஷா ஒன்றில் கமலா உத்தியோகத்துக்குப் போய்விடுவாள். நடராஜன் பஸ்ஸில் ஏறி மவுண்ரோட் செல்வான். மாலையிலும் ஏறக்குறைய ஒரே சமயத்தில் இருவரும் வீடு திரும்புவார்கள்.

சில மாதங்கள் கடந்தன. நடராஜனுக்குப் பாங்கியில் 'பிரமோஷன்' கிடைத்தது. அதோடுகூடச் சம்பள உயர்வும் ஏற்பட்டது. ஏற்கெனவே பாங்கி சிப்பந்திகளுக்கு நடராஜன் மேல் வயிற்றெரிச்சல். "நடராஜனுக்கு என்ன அப்பா? கவலை இல்லை. அவன் மனைவி வேறு சம்பாதிக்கிருள்! அவனுக்குக் குடும்பச் சிரமமே கிடையாது" என்று அடிக்கடி சொல்லுவார்கள்.

"நான் கூட என் மனைவியை நாலாயிவிருந்து 'டைப்ரைட்டிங் இன்ஸ்டிட்யூடுக்கு' அனுப்பலாம் என்று பார்க்கிறேன்" என்பான் ஒருவன் கிண்டலாக. இதையெல்லாம் அவன் காதில் போட்டுக் கொள்வதே கிடையாது. ஆனால் அன்று ஆபீஸ் சூபரிண்டெண்ட், "கையாலாகாத பயல் அல்லவா பெண்டாட்டியை வேலைக்கு அனுப்புவான்?" என்று ஏதோ ஒரு சந்தர்ப்பத்தில் பட்டும் படாததுமாகக் கூறியது அவன் மனத்தில் 'சுருக்'கென்று தைத்தது.

நடராஜனுடைய ஆபீஸில் ஆர்ச் கெப்ரீல் என்று ஒரு கிறிஸ்தவப் பெண் வேலை பார்த்துக் கொண்டிருந்தாள். நடராஜனுடைய டிபார்ட்மெண்டுக்கு அவளை அப்போது புதிதாக மாற்றி யிருந்தார்கள். அவளுடைய எளிய வாழ்க்கையும், சாந்தமான சுபாவமும் கள்ளங் கபடமற்ற பேச்சும் நடராஜனுக்கு அவள்மேல் ஒரு அநுதாபத்தை உண்டு பண்ணின. "பாவம், என்ன கஷ்டமோ! இந்தப் பெண் இங்கு வேலைக்கு வந்திருக்கிருள்!" என்று நினைத்துக் கொள்வான்.

ஆர்ச் கெப்ரீலின் சாதுத் தன்மையைப் புரிந்து கொண்ட ஹெட்கிளார்க் அவளிடம் கடுமையாக வேலை வாங்குவார். நாலைந்து 'லெட்ஜர்'களை ஒரே தடவைகளில் கொடுத்துக் கூட்டச் சொல்வார். பாவம், சாதுப் பெண்! ஓய்ச்சல் ஒழிவில்லாமல் சொன்ன வேலை எல்லாம் செய்து கொண்டிருப்பாள்.

ஒரு நாள் இடைவேளையின் போது ஆர்ச் கெப்ரீல் டிபனுக்குக் கூடப் போகாமல் வேலை செய்து கொண்டிருந்தாள். நடராஜன் சாப்பிட்டுவிட்டு முன்னதாகவே தன்னுடைய இடத்துக்கு வந்து விட்டான். கெப்ரீல் வேலை செய்து கொண்டிருப்பதைப் பார்க்க அவனுக்குப் பரிதாபமாக இருந்தது. "என்ன கெப்ரீல், நீங்கள் டிபனுக்குப் போகவில்லையா" என்று கேட்டான்.

"நேரம் இல்லை, நடராஜ்! இந்த 'அகௌண்ட்ஸைக் குளோஸ்' செய்து விட்டுத்தான் டிபனுக்குப் போக வேண்டும். அதுவோ 'டாலி' ஆகமாட்டேன் என்கிறது" என்ருள். ஏக்கத்தின் சாயல் அவள் முகத்தில் படர்ந்திருந்தது.

"அதற்காக டிபன் சாப்பிடாமலா வேலை செய்வார்கள்? இப்படிக் கொடுங்கள், லெட்ஜரை!" என்று சொல்லிக் கொண்டே புத்தகத்தை வாங்கிப் பரிசீலனை செய்தான் நடராஜன். ஒரு நொடியில் கெப்ரீல் செய்த தவறைக் கண்டு பிடித்து விட்டான் நடராஜன். வரவில் போடவேண்டிய தொகையைத் தவறுதலாகச் செலவாகக் காட்டி யிருந்ததினால்தான் அவளுக்குக் கணக்குச் சரிப்பட்டு வரவில்லை.

கெப்ரீலுக்குத் தன் கணக்குச் சரிப்பட்டுப் போனதில் திருப்தியே. "நல்லவேளை இதை மட்டும் ஹெட் கிளார்க் கண்டுபிடித்திருந்தால் அவ்வளவுதான்......" என்று சொல்லிச் சிரித்துக் கொண்டாள் அவள்.

நடராஜனின் நல்ல குணம் அவளுக்கு நன்கு தெரியும். எனவே தன்னுடைய மனத்தைத் திறந்து காட்ட விரும்பினுள். சந்தர்ப்பமும் அப்போது உதவி செய்தது.



"என்னங்க இது! ஹிந்து மாதிரியும் முஸ்லிம் மாதிரியும் இரண்டு விதமாகவும் வேஷம் போட்டுக்கிட்டிருக்கீங்க! வேடிக்கையாயிருக்குதே!"

"இங்கே ஒரு இடத்திலே ஹிந்து—முஸ்லிம் ஒற்றுமையைப்பற்றிப் பேசச் சொன்னி யிருக்காங்க, அந்தக் கூட்டத்துக்குப் போகிறேன்!"

## சென்ஸஸ் எடுக்கிறார்!




"மிஸ்டர் நடராஜன்! ஒரு சமாசாரம் உங்களிடம் ரகசியமாகச் சொல்லவேண்டும். உங்கள் மனத்தோடு வைத்துக் கொள்ளுங்கள்" என்று பீடிகை போட்டான்.

நடராஜன் காதைத் நீட்டிக்கொண்டு கெப்ரீல் அருகே போய் அமர்ந்து கொண்டான்.

"நடராஜ்! தயவுசெய்து வேறு எங்கே யாவது வேலை இருந்தால் சொல்லுங்கள். நான் போய்விடுகிறேன்" என்றான்.

நடராஜன் "ஏன்?" என்று கேட்டான்.

அவன் சொன்ன காரணத்தைக் கேட்டதும் அவனுக்கு இருதயமே நின்றுவிடும் போல் இருந்தது. அவனுடைய மனசு எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணிற்று. தன்னுடைய மனைவியும் கெப்ரீல் போலத் தானே இன்னொரு ஆபீஸில் வேலையில் இருக்கிறாள்? அங்குள்ளவர்கள் இம்மாதிரி எல்லாம் மோசமாக நடந்துகொள்ள மாட்டார்கள் என்பது என்ன நிச்சயம்? சீச்சீ! நாம் நன்றாகச் சம்பாதிக்கும்போது அவளை ஏன் வேலைக்கு அனுப்ப வேண்டும்?— இப்படி யெல்லாம் எண்ணிக்கொண்டு போனான் நடராஜன்.

அன்று மாலை சீக்கிரமே வீடு திரும்பிய நடராஜன் தன் மனைவியிடம் இதைப் பற்றிப் பிரஸ்தாபிக்க எண்ணினான்.

ஆனால் கமலா அன்று மாலை சீக்கிரம் வீட்டுக்கு வரவில்லை. இரவு வெகு நேரம் கழித்துத்தான் வந்தாள். நடராஜனுக்கு இது ரொம்பவும் வேதனையை அளித்தது. கமலா வந்தவுடன், "என்ன கமலா இன்றைக்கு ஏன் இவ்வளவு நேரம்?" என்று கேட்டான்.

"ஒன்றுமில்லை. எங்கள் மானேஜருக்கு சந்திரிகா டாக்கீஸிலிருந்து இரண்டு டிக்கட்டு வந்திருந்தது. அங்கே போயிருந்தோம்" என்றாள் அவள்.

நடராஜனுக்கு வேதனை சற்று அதிகமாயிற்று. பேச்சை வளர்த்த வேண்டாம் என்று சும்மா இருந்துவிட்டான்.

ராத்திரி படுக்கையில் புரண்டு புரண்டு படுத்துக் கொண்டிருந்தானே ஒழிய அவனுக்குத் தூக்கம் வரவில்லை. இதயத்தை யாரோ தன் பலங்கொண்ட மட்டில் அமுக்குவது போல் இருந்தது.

கமலா அருகே வந்து, "ஏன் தூங்கவில்லை, உடம்பு சரியில்லையா?" என்று அன்பு ததும்பக் கேட்டாள்.

நடராஜனுக்கு அப்போது தான் மனத்தில் ஆறுதல் ஏற்பட்டது. இதுதான் நல்ல சமயம் என்று பேச்சை ஆரம்பித்தான்.

"கமலா, நாளையிலிருந்து நீ வேலைக்குப் போகவேண்டாம். வேலையை ராஜிநாமாச் செய்துவிடு. எனக்கு வரும் சம்பளம் நம் குடும்பத்துக்குப் போதும். நீ எதற்காக உத்தியோகம் பார்க்கவேண்டும். மேலும் உனக்குப் பிரசவத்துக்கு வேறு மாதம் நெருங்கிக் கொண்டிருக்கிறது" என்றான். கஞ்சியின் நிசப்தத்தைக் கிழித்துக் கொண்டு வார்த்தைகள் நீர்க்கமாக அவன் வாயினின்றும் வெளி வந்தன.

கமலாவுக்குப் பதில் என்ன சொல்லுவது என்று தெரியவில்லை. பேசாமல் இருந்தாள். சற்று நேரம் கழித்து, "பிரசவத்துக்கு மூன்று மாதம் லீவு தருவதாக மானேஜர் சொல்லி யிருக்கிறார்" என்று இழுத்தாற் போல் மெதுவாகச் சொன்னாள்.

"கமலா! இந்த விஷயத்தில் எனக்கு உன்னோடு தர்க்கம் செய்ய விருப்பமில்லை. நான் சொல்வதைத் தட்டாமல் கேட்டால் தான் எனக்குத் திருப்தி" என்று தீர்மானமாகச் சொல்லிவிட்டுப் போர்வையை இழுத்துப் போர்த்திக் கொண்டான் அவன்.

கமலாவுக்கு அப்புறம் அவனோடு பேச்சுக் கொடுக்கத் தைரியமில்லை. 'கம்மென' என்று போய்ப் படுத்துக் கொண்டாள். திடீரென்று நடராஜனின் மனமாற்றத்துக்கு அவளால் காரணம் கண்டுபிடிக்க முடியவில்லை. கண்ணியமான ஆபீஸ் மானேஜரையும் நல்லமான வேலையையும் விட்டுவிட அவளுக்குச் சிறிதும் இஷ்டமில்லை. ஆனாலும் தாலி கட்டிய புருஷனின் வார்த்தையை ஒரு மனைவி தட்டிப் பேசலாமா?

மறுநாள் விடிந்தவுடன், நடராஜன் சீக்கிரமாகவே ஆபீஸுக்குக் கிளம்பிவிட்டான். போகும்போது கமலாவிடம், "என்ன கமலா, நான் சொன்னது ஞாபகம் இருக்கட்டும். இன்றைய தினம் கால் கடிதாசு எழுதிக் கொடுத்துவிட்டு வந்துவிடு" என்றான்.

ஆபீஸுக்குப் போனவுடன்தான் நடராஜனுக்குத் திருப்தி ஏற்பட்டது. பெரிய காரியத்தை வெகு சுலபமாகச் சாதித்துவிட்டது போல் நினைத்துக்கொண்டான்.

மணி பத்து அடித்தவுடன் ஆபீஸ் மானேஜர் நடராஜனைக் கூப்பிட்டு அனுப்பினார். காலை வேளையில் எதற்குக் கூப்பிடுகிறார் என்று நினைத்துக்கொண்டே மானேஜரின் அறைக்குள் நுழைந்தான் அவன். மானேஜர் நடராஜனைப் பார்த்தவுடன், "நடராஜ், என்னை மன்னிக்கவேண்டும். இன்றைய தினத்திலிருந்து உங்களை வேலையிலிருந்து நீக்கி விட்டோம்" என்று கூறி அவனிடம் ஒரு கவரை நீட்டினார்.

நடராஜனுக்குத் தூக்கிவாரிப் போட்டது. தன்னைச் சுற்றியுள்ள பொருளெல்லாம் சுழலுவதுபோல் இருந்தது. உறையைக் கையில் வாங்கியபடியே, "ஏன், நான் என் வேலைகளை யெல்லாம் சரிவரத்தானே செய்துகொண்டு வருகிறேன்......" என்றான் தயக்கத்துடன்.

"நடராஜன்! இந்த 'பாங்கி டிரிபுனல் அவார்ட்' வந்தவுடன் பாங்கிகள் பாடு எல்லாம் கஷ்டம் என்று உங்களுக்குத் தெரியும். அதற்காக ஐந்து பேரை வேலையிலிருந்து நீக்கி விட்டோம். துரதிர்ஷ்டவசமாக உங்கள் பெயரும் அதில் சேர்ந்து விட்டது" என்றார் அவர்.

நடராஜனுக்கு ஒரு நொடியில் விஷயம் விளங்கிவிட்டது. நேற்று ஆச் கெபீரோடு தான் பேசிக் கொண்டிருந்தபோது அவருடைய பியூன் அடிக்கடி தன்னுடைய மேஜைக்கருகே வந்து பேப்பர்கள் எடுப்பதும் வைப்பதுமாக இருந்ததின் காரணம். அவன்தான் வத்தி வைத்திருக்க வேண்டும் என்று தீர்மானித்து விட்டான்.

பதில் பேசாமல் நடராஜன் அங்கிருந்து வெளியேறினான். ஆஹா! நம் வாழ்க்கையில் கஷ்டகாலம் மறுபடியும் ஆரம்பித்துவிட்டது போலிருக்கிறது. கமலாவையும் அல்லவோ அவள் உத்தியோகத்தை விட்டு ராஜிநாமா செய்யச் சொல்லி விட்டோம்? அவளும் பதில் பேசாமல் ஒத்துக் கொண்டு விட்டாளே!—நடராஜனின் மனசு நிலை கொள்ளாமல் தவித்தது. மனக் குழப்பத்துடன் போய் பஸ்ஸில் ஏறிக்கொண்டான்.

பிராட்வே முனையில் பஸ்ஸிலிருந்து நடராஜன் இறங்கவும், கமலா எதிரிருந்த ரிக்ஷா வீட்டை நோக்கிப் போகவும் சரியாக இருந்தது. கமலாவைப் பாங்கியில் போய்ப் பார்க்கலாம் என்றிருந்த அற்ப ஆசையும் நடராஜன் மனத்தை விட்டுப் போய்விட்டது. புருஷனின் வார்த்தையை அவள் காப்பாற்றி விட்டாள். வேலையை ராஜிநாமாக் கொடுத்து விட்டாள்.

நடராஜன் வீட்டை அடைந்தபொழுது கமலா ஏக்கமே உருவெடுத்தாற் போல் உட்கார்ந்து கொண்டிருந்தாள். நடராஜன் அவ்வளவு சீக்கிரம் வீடு திரும்பிய காரணம் அவளுக்கு விளங்கவில்லை.

வந்ததும் வராததுமாக, "கமலா, என்ன நடந்தது? வேலையை ராஜிநாமாச் செய்து விட்டாயா?" என்று பரபரப்போடு கேட்டான் நடராஜன்.

"காலையில் போனவுடன் முதல் காரியமாக ராஜிநாமா மனுவை டைப் செய்து மானேஜரிடம் கொடுத்துவிட்டேன்..."

"என்ன நடந்தது பிறகு? சொல்லு, கமலா சீக்கிரம்."

"மானேஜர் கூப்பிட்டு அனுப்பினார். நமக்குள் நேற்று நடந்ததைச் சொன்னேன். அவர் எல்லாவற்றையும் கேட்டுவிட்டு, 'கமலா, உன் கணவர் ஏன் உன்னை ராஜிநாமாச் செய்யச் சொல்கிறார் என்று எனக்குத் தெரியும். உனக்கு விடுதலை கொடுப்பது பற்றி எனக்கு ஆட்சேபனை இல்லை. உன் கணவரிடம் அவரும் இந்த பாங்கியிலேயே உத்தியோகம் பார்க்க இஷ்டமா என்று கேள். நீங்களிருவரும் சேர்ந்து உத்தியோகம் பார்த்தால் அவர் மனத்துக்குத் திருப்தி ஏற்படும் என்று நான் நினைக்கிறேன்' என்று உங்களை ஒரு வார்த்தை இது விஷயமாகக் கேட்டு வரச் சொன்னார்" என்றாள் அவள். அவள் கண்கள் அப்போது கலங்கி நின்றன.

"அப்படியானால் என்னை நீ ராஜிநாமா செய்யச் சொல்கிறாயா?"

"ஆ...மா...ம்"

"கமலா, கவலைப்படாதே! நான் இனிமேல் ராஜிநாமாச் செய்யவேண்டிய அவசியமில்லை. அவர்களே என்னைப் போகச் சொல்லி விட்டார்கள். உன் பாங்கியிலேயே வேலை செய்ய எனக்குப் பூரண சம்மதம்" என்றான் நடராஜன்.

அதைக் கேட்டதும் கமலாவின் கண்கள் ஆச்சரியத்தால் மலர்ந்தன.

மனத்திலிருந்த பாரம் நீங்கியதைப்போன்ற உணர்ச்சி நடராஜனுக்கு ஏற்பட்டது.

ஷாலிமார் தயாரிப்புகளை ஆர்டர்
செய்யும்போது எந்த
வேலைக்காக என்பதைத்
தெரிவிக்கவும்.

ஒரு
அழகிய
நவீன
சுவர் வர்ணப்பூச்சு



ஷாலிமார் மாட்கோட்
நீடித்து உழைக்கவல்ல.
அழிக்கக்கூடிய, பூஞ்சக்
காளான் படியாத ஓர் எண்
ணெய் கலந்த வர்ணப்பூச்சு,
காரை, காங்கிரீட், சிமெண்டு,
மரத்தின்மேல் பூசலாம். ஷாலி
மார் மாட்கோட் 24 அழ
கிய வர்ணங்களில் கிடைக்கும்.

அடித்தாற்
போல்
சொல்லுங்கள் ஷாலிமார் மாட் கோட்

SPZ-64-TM

சுவர்களுக்கான வர்ணப்பூச்சு

SHALIMAR PAINT, COLOUR & VARNISH CO., LTD.,
Post Box 136, Madras 1. Importers & Distributors for Ceylon:
Lewis Brown & Co., Ltd., Post Box 85, Colombo

# ப்ளாண்டர்ஸ்
## ஹை க்ரோன்
## நீலகிரித்
# தேயிலை




## நீங்கள் ரசிக்கக்கூடிய ருசிக்காக

THE PLANTERS COMPANY, LTD.,
COONOOR, NILGRIS S INDIA.



## அதி அற்புத ரகங்கள்!

புகழ் பெற்ற ஸ்விஸ் பாக்டரிகளில் தயாரானது ஒவ்வொன்றும் 5 வருஷ உத்திரவாத முள்ளவை




| | | | | |
|---|---|---|---|---|
| 6 ஜுவல் | க்ரோம் | 30/- | ரோல்டுகோல்டு | 33/- |
| 7 ,, | க்ரோம் | 35/- | உயர் ரகம் | 38/- |
| 15 ,, | க்ரோம் | 44/- | ரோல்டுகோல்டு | 48/- |




| | | | | |
|---|---|---|---|---|
| 6 ஜுவல் | க்ரோம் | 28/- | ரோல்டுகோல்டு | 33/- |
| 7 ,, | க்ரோம் | 33/- | உயர் ரகம் | 35/- |
| 15 ,, | க்ரோம் | 42/- | ரோல்டுகோல்டு | 45/- |




| | | | |
|---|---|---|---|
| முழுவதும் ஜுவல் | 19/- | உயர் ரகம் | 21/- |
| ரேடியத்துடன் | 21/- | சென். செகண்டு | 23/- |
| ஸ்பெஷல் உயர்ந்த | | ரக மெஷின் | 27/- |




| | | | | |
|---|---|---|---|---|
| 6 ஜுவல் | க்ரோம் | 26/- | ரோல்டு கோல்டு | 32/- |
| 7 ,, | க்ரோம் | 32/- | ரோல்டு கோல்டு | 36/- |
| 15 ,, | க்ரோம் | 48/- | ரோல்டு கோல்டு | 58/- |




| | | | | |
|---|---|---|---|---|
| 6 ஜுவல் | க்ரோம் | 22/- | உயர் ரகம் | 25/- |
| 6 ,, | ரோல்டு கோல்டு | 30/- | உயர் ரகம் | 33/- |
| 15 ,, | க்ரோம் | 45/- | ரோல்டு கோல்டு | 55/- |
| டைம் பீஸ் | | 20/- | உயர் ரகம் | 25/- |
| பாக்கெட் வாட்ச் | | 12/- | உயர் ரகம் | 15/- |

*தபால் செலவு பிரத்தியேகம். இரண்டு கடிகாரங்கள் ஆர்டருக்கு தபால் செலவு இனாம்*

# PIONEER WATCH Co

POST BOX NO 11428 CALCUTTA

**உத்திரவாதமுள்ள ஸ்டெய்ன்லெஸ்**

## ஸ்டீல் சாமான்கள்

**என்றும் பிரகாசமாக இருக்கும்.**
**என்றும் மங்காது.**




ஒவ்வொரு வீட்டுக்கும், ஹோட்டல், ஆஸ்பத்திரி, காண்டீனுக்கும் தேவையான சாமான்களும் உள்ளன.

டாம்பீகமானவை ஆனால் மலிவானவை.
சுகாதாரமானவை — நீடித்துழைப்பவை.

---

ஆசிரியர் "கல்கி"
எழுதிய

# பார்த்திபன் கனவு

•

தமிழ்நாட்டுச் சரித்திரத்தின் மகோன்னத காலத்தை அற்புதமாக விளக்குகிறது

•

**விலை ரூ. 6-8-0**

•

கிடைக்குமிடம் :

"கல்கி" காரியாலயம்,
கீழ்ப்பாக்கம் :: சென்னை

---

## இருமல், அவஸ்தை யளிக்கும் ஆஸ்துமா, மார்ச்சளி 3 நிமிஷங்களில் ஒழிக்கப் படுகின்றன

ஆஸ்துமா, மார்ச்சளி தாக்குதலால் மூச்சுத் திணறி தூக்கமின்றி அவதிப்படுகிறீர்களா? அதிகமாக இருமுவதால் பிராணாவஸ்தையாக இருக்கிறதா? பலஹீன உணர்ச்சியினால் வேலை செய்ய அசக்தராகவும், ருசியுள்ள வஸ்துக்களையும் உணவுகளையும் சாப்பிட முடியவில்லையா?

எவ்வளவு நாட்களாக உபாதையுற்று எதை உபயோகித்திருப்பினும் சரி, மெண்டாகோ (Mendaco) ஓர் புதிய நம்பிக்கை அளிக்கும். மயக்க மருந்துகளில்லை, புகை பிடித்தலில்லை, இஞ்சக்ஷனில்லை, ஆட்டோமைஸர் தேவையில்லை. செய்ய வேண்டியதெல்லாம் ருசியற்ற இரண்டு வில்லைகளை சாப்பாட்டின் போது உட்கொள்ள வேண்டியதே. உபத்திரவங்கள் மாயமாக மறைந்து விடும். மூன்றே நிமிஷங்களில் மெண்டாகோ (Mendaco) இரத்தத்துடன் கலந்து வேலை செய்யத் தொடங்கி, கபத்தைக் கரைத்து சிரமமின்றி ஸ்வாசத்தை அபிவிருத்தி செய்து முதல் நாள் இரவில் நல்ல நித்திரையை அளித்து விரைவில் பல வருஷங்கள் யௌவன உணர்ச்சியையும் பலத்தையும் பெறுவீர்கள்.

### 2 வருஷங்களாக ஆஸ்துமா இல்லை

மெண்டாகோ (Mendaco) அநேகமாக உடனே குணமளித்து ஸ்வாசத்தை இலகுவாக்குவது மட்டுமின்றி எதிர்கால தாக்குதல் ஏற்படாது செய்கிறது. உதாரணமாக ஜே. கிச்சிட்ஸ், நாமிங்டன், ஒன்ட், கானடா, இருமல் மூச்சுத் திணறலால் இரவு தூக்கமின்றி 40 பவுண்டு எடை குறைந்து, இறந்து விடுவார் என எதிர்பார்க்கப்பட்டது. மெண்டாகோ (Mendaco) ஆஸ்துமாவை முதல் நாளே நிறுத்திவிட்டது. இரண்டு வருஷங்களில் அவ்வுபாதையே மீண்டும் ஏற்படவில்லை.

### பணம் வாபஸ் உத்தரவாதம்

மெண்டாகோ (Mendaco) முதல் வேளை சாப்பிட்டதுமே நேரடியாக ரத்தத்துடன் கலந்து ஆஸ்துமாவை ஒழிக்கிறது. மெண்டாகோ (Mendaco) அதிவிரைவில் வயதில் பல வருஷம் யௌவன உணர்ச்சி, பலம் இவற்றை அளிக்கிறது. வாபஸ் உத்தரவாதத்தின் மேல் மெண்டாகோ (Mendaco) உபயோகித்துப் பார்த்துத் தீர்ப்பளியுங்கள். மெண்டாகோ (Mendaco) சாப்பிட்ட பின் பூரண குணம் பெற்று, திருப்தி யளிக்காவிடில் வெற்றுப் பெட்டியை அனுப்பினால் முழுத் தொகையும் வாபஸ் செய்யப்படும். இன்றே மருந்து வியாபாரியிடமிருந்து மெண்டாகோ (Mendaco) வாங்குங்கள். இன்றிரவு எப்படித் தூங்குகிறீர்கள், மறுநாள் காலை எவ்விதமான தெம்புணர்ச்சி ஏற்படுகிறதென்பதையும் பாருங்கள்.

**Mendaco**
மெண்டாகோ

உத்தரவாதம் உங்களுக்குப் பாதுகாப்பு அளிக்கிறது.

★ ஆஸ்துமா ★ மார்ச்சளி நோய் ★ ஹே ஜ்வரம் இவற்றை நிவர்த்திக்கிறது

# திடமான தேக ஆரோக்யத்திற்கு

# அடமின்

(அதிக வீர்யமுள்ள விடமின் சத்து எண்ணெய்)

காப்ஸ்யூல் வடிவத்தில் வெளியிடுவதை

அறிமுகப்படுத்துகிறோம்

25, 50, 100 கொண்ட பாட்டில்களில் கிடைக்கும்

**கவர்ன்மெண்ட் ஆயில் பாக்டரி**

கள்ளிக்கோட்டை

டிபார்ட்மெண்ட் ஆப் இண்டஸ்ட்ரீஸ் & காமெர்ஸ்

**கவர்ன்மெண்ட் ஆப் மெட்ராஸ்**

SISTA'S GO-12-B



# புது வருஷத்திய புதிய விற்பனை!

(பிளாஸ்டிக் ஸ்டிராப் உபயோகிப்பதன் மூலம் ஏற்படும் கெடுதல்களை முன்னிட்டு) முன்பு இருந்த பழைய விலையிலேயே விற்கப்படும் கடிகாரங்கள் ஒவ்வொன்றுடனும் ஒரு நவீன கடிகாரத்திற் கேற்றபடி அட்ஜஸ்ட் செய்யும் ஸ்டெயின்லெஸ் ஸ்டீல், க்ரோமியம் அல்லது ரோல்டு கோல்டு செயினும் இலவசமாக அளிக்கப்படும். 5, 7 ஜுவல் பதித்த ஸ்விஸ் கடிகாரங்கள் நான்கு வருஷங்களுக்கும் 15, 17 ஜுவல் பதித்த ஸ்விஸ் கடிகாரங்கள் 7 வருஷ திருப்திகரமான உழைப்பிற்கும் உத்தரவாத முள்ளவை. அழகிய வெல்வெட் பெட்டியில் உத்தரவாத சர்ட்டிபிகேட்டுடன் சப்ளை செய்யப்படும். தபால் செலவு, பாக்கிங், விற்பனை வரி இலவசம்.




## இனாம்

இரண்டு கடிகாரங்களுக்கு ஒரு கவர்ச்சியுள்ள டயரியுடன் பேனா பென்ஸில் செட்டும், மூன்று கடிகாரங்களுக்கு ஒரு அதிசய நாக்கர ரயில்வே டயம் பீஸும், ரோல்டு கோல்டு செயினுடன் நல்ல ரேடியம் டயல் ரோல்டு கோல்டு பாக்கெட் வாட்சும் இனாம். நான்கு கடிகாரங்களுக்கு ஒரு அழகிய டபிள் க்ரோமியம் சதுர வடிவ டேபிள் கடிகாரமோ அல்லது ரேடியம் டயலுடன் கூடிய ஸ்விஸ் டிராவலிங் அலாரம் டைம்பீஸோ அளிக்கப்படும். ஒரு நவீன 1951 பிளாஸ்டிக் காலண்டர் ஒவ்வொரு கடிகாரத்துடன் இலவசம்.



ரவுண்டு சென்டர் செகண்ட்
மாற்றியமைக்கக்கூடிய செயினுடன் (சைஸ் 10½)

| கேட்லாக் செ. | | ஜுவல்கள் | விலை |
|---|---|---|---|
| 601 | க்ரோமியம் ஸ்டீல்பேக் | ஜுவல்கள் | 24 |
| 602 | ரோல்டுகோல்டு ஸ்டீல்பேக் | " | 27 |
| 605 | ரோல்டுகோல்டு ஸ்டீல்பேக் | 7 | 44 |
| 672 | க்ரோமியம் ஸ்டீல்பேக் | 15 | 50 |
| 673 | ரோல்டுகோல்டு ஸ்டீல்பேக் | 15 | 55 |
| 676 | ரோல்டுகோல்டு ஸ்டீல்பேக் | 17 | 70 |



ரவுண்டு சிறிய வடிவம்
மாற்றியமைக்கக்கூடிய செயினுடன் (சைஸ் 8¾)

| கேட்லாக் செ. | | ஜுவல்கள் | விலை |
|---|---|---|---|
| 613 | க்ரோமியம் ஸ்டீல்பேக் | 5 | 28 |
| 614 | ரோல்டுகோல்டு ஸ்டீல்பேக் | 5 | 31 |
| 615 | முழு ரோல்டுகோல்டு கேஸ் | 5 | 33 |
| 616 | க்ரோமியம் ஸ்டீல்பேக் | 7 | 33 |
| 617 | ரோல்டுகோல்டு ஸ்டீல்பேக் | 7 | 37 |
| 679 | ரோல்டுகோல்டு ஸ்டீல்பேக் | 15 | 60 |
| 680 | 20 மைக்ரான்ஸ் தங்க கேஸ் | 15 | 70 |



வாட்டர் ப்ரூப், ஷாக் ப்ரூப்,
சென்டர் செகண்ட், ரேடியம் டயல் (சைஸ் 10½)

| | | | |
|---|---|---|---|
| 723 | க்ரோமியம் ஸ்டீல்பேக் கேஸ் | 15 | 60 |
| 724 | ரோல்டுகோல்டு ஸ்டீல்பேக் | 15 | 65 |
| 725 | 20 மைக்ரான்ஸ் தங்க கேஸ் | 15 | 75 |
| 726 | க்ரோமியம் ஸ்டீல்பேக் | 17 | 80 |
| 727 | ரோல்டுகோல்டு ஸ்டீல்பேக் | 17 | 90 |
| 728 | 20 மைக்ரான்ஸ் தங்க கேஸ் | 17 | 105 |



நீண்ட சதுர வடிவம்
மாற்றியமைக்கக்கூடிய செயினுடன் (சைஸ் 7¾)

| | | | |
|---|---|---|---|
| 635 | க்ரோமியம் ஸ்டீல்பேக் | 5 | 35 |
| 636 | ரோல்டுகோல்டு ஸ்டீல்பேக் | 5 | 38 |
| 638 | க்ரோமியம் ஸ்டீல்பேக் | 7 | 40 |
| 640 | முழு ரோல்டுகோல்டு கேஸ் | 7 | 46 |
| 700 | க்ரோமியம் ஸ்டீல்பேக் | 15 | 55 |
| 701 | ரோல்டுகோல்டு ஸ்டீல்பேக் | 15 | 60 |
| 704 | ரோல்டுகோல்டு ஸ்டீல்பேக் | 17 | 80 |

**ASIA WATCH HOUSE** P. B. 3607, BOMBAY-4

Edited Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
116-119, Sladens Gardens, Poonamallee High Road, Kilpauk Madras

# நீரிழிவு

## ஏழு நாட்களில் குணமாகும்!

●

எவ்வளவு நாட்பட்டதாயினும், மிகக் கடுமையாக இருப்பினும் நவீன ரஸாயன முறைத் தயாரிப்பான **வீனஸ் சார்ம்** வியாதியை முற்றிலும் குணமாக்கிவிடும். அடங்காத பசி, மரண தாகம், அடிக்கடி சிறுநீர் பிரிதல், சொறி சிறங்கு ஆகிய இவைகளே இவ் வியாதியின் முக்கிய அறிகுறிகள். இதை கவனிப்பின்றி விட்டு விட்டால் கட்டி, பிளவை, கண் கோளாறு முதலிய உபத்திரவங்களில் முடியும். **வீனஸ் சார்ம்** ஆயிரக் கணக்கானவர்களை மரிப்பினின்றும் பிழைக்க உதவியுள்ளது. உபயோகித்த மறு தினமே நீரிலுள்ள சர்க்கரைச் சத்தைக் குறைத்து இதமளிக்கும். இரண்டு மூன்று தினங்களில் பாதி குணமடைந்ததாக நீங்களே உணர்வீர்கள். ஆகார நிபந்தனை கிடையாது. இலவசமான விபரங்கள் அடங்கிய காட்லாகிற்கு எழுதவும்.

●

**50 மாத்திரைகள் கொண்ட பாட்டில் ரூ. 6-12-0**

(தபால் செலவு இலவசம்)

●

**வீனஸ் ரிஸர்ச் லாபரடரி (K.M.)**

**தபால் பெட்டி நெ. 587, கல்கத்தா**

FAS-534

நவ நாகரீக பெண்கள் விரும்புவது



# டி.எஸ்.ஆர். கோகுல் ஹேர் ஆயில்



**டி.எஸ்.ஆர் & கோ.**
**கும்பகோணம்.**

சென்னை நகரத்திற்கு சோல் ஏஜண்டுகள்:
மெஸர்ஸ். சுராஜ் ஏஜன்ஸீஸ்
37, ஜானி ஜஹான்கான் ரோடு
ராயப்பேட்டை, மதராஸ்

கோவை, பாலக்காடு அண்டு நீலகிரிக்கு சோல் ஏஜண்டுகள்:
B. பாலபட்டாபி செட்டியார்
346, வைசியாள் தெரு - கோயமுத்தூர்

ஸ்டாக்கிஸ்டுகள்:
மெஸர்ஸ். சண்டிகா & கோ.,
முதல் அக்ரஹாரம் சேலம் டவுன்

REGD. NO. M 4392




துணிகளை அடித்துத்துவைக்காமலே வெண்மையாகவும்
பிரகாசமாகவும் சலவை செய்கிறது!

S. 149-50 TM